# திராவிடநாடு

27—4—58 | வார வெளியீடு | விலை 16காசு


## என். ஜி. ஓ.

—[ மான் ]—

காக்காய் காக்காய் கருநிறக் காக்காய்
கூவம் நதியை விட்டுநீ டெல்லிக்
கோட்டைக் குப்போக நேருமே யாகில்
கூறுக அங்கே கொலுவீற் றிருக்கும்
நேரு பண்டிதரிடம் கூறுக இதனை
செத்துப் பிழைக்கும் சித்ர வாதையில்
சிக்கித் தவிக்கும் 'என்.ஜி.ஓ.' வாழ்வை
சற்றே எடுத்துக் கூறுக அவரிடம்....!

பிணியுடைத் தந்தை படுந்துயர் அன்னை
தினமும் செத்துப் பிழைத்திடும் குழந்தை
தனியொரு ஆளாய்த் தவித்திடும் மனைவி
ஒண்டுக் குடிலில் அண்டிய புழுவாய்
மனமிக நொந்து மாதக் கூலிக்கு
மாடாய் உழைக்கும் ஏழை 'என்.ஜி.ஓ.'
தினமும் செத்துப் பிழைத்திடும் கோரம்
தேசம் எங்கணும் இல்லாப் புதுமை

அபிவிருத் தித்திட்டங் கள் அனை த்துக்கும்
ஆதாரம் போன்றவர் கள்'என்.ஜி. ஓ'க்கள்
அபிவிருத்தி அவர்களுக் கில்லை யென்றால்
அவர்போடும் திட்டங்கள் என்ன ஆகும்?
செத்துவிழக் குதிரையினை விட்டு வண்டியைச்
செப்பனிடும் நேருபண்டித ரிடம்போய் சொல்லு....
புத்துலகச் சமுதாயம் வேணுமெனச் சொல்லும்
பூமானின் புத்தியிலே படும்படி நீசொல்லு:

# இயற்கையும், இதயமும்

து. இரத்தினவேல்

இயற்கை அரங்கிலே திகழும் காட்சிகளுக்கும் மனித இதய அரங்கிலே எழும் உணர்ச்சிகளுக்கும் மிக நெருங்கிய உறவு உண்டு. உயர்ந்த மலை, மலையின் முகட்டைத் தழுவிச் செல்லும் முகிற் கூட்டம், செக்கர் வானம், ஆர்ப்பரிக்கும் அலை கடல், பசுமை படர்ந்த பரந்த வெளி, மலர்க் குவியல் — இவற்றைக் காணுந்தோறும் காணுந்தோறும் இதயத்தில்தான் எத்துணைவித உணர்ச்சிகள் எழுகின்றன! மனித இதயத்துள் ஒடுங்கிக் கிடக்கும் உணர்ச்சிகளை அலை அலையாக எழச் செய்வது இயற்கையே. இவ்வாறு இதயத்தை ஈர்க்கின்ற ஆற்றல் இயற்கையிடத்தே இருப்பதால் தான் இதயமும் இதயத்தைக் கவரும் இயற்கையும் கவிஞர்களுக்குப் பெரு விருந்தாகிறது. இந்த உண்மையை அறிந்ததால்தான் ஜே.சி. ஷைர்ப் எனும் ஆங்கிலப் புலவர், "இயற்கை அரங்கும் இதய அரங்கும் கவிஞர்களது உலைக்கூடங்கள்" என வருணிக்கிருர். தமிழ்ப் பெரும் புலவர் திரு. வி. க. அவர்கள் "இயற்கையை எண்ணி எண்ணிப் புலன்களை இயற்கை வழிச் செலுத்தி இன்பம் நுகர்கிறவனே புலவன்" என்று குறிப்பிடுகிருர். எனவே, இயற்கை இன்பத்தை நுகராது இதய உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் பாடல்களைப் பாடுவது அரிது. அப்படியே பாடினுலும் அந்தப் பாடல்கள் நெடுங்காலம் வாழாது என்பது ஒருதலை.

ஆனுல், ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் பாடப்பட்ட சங்கப்பாடல்களில் இதய உணர்ச்சிகள் இன்றும் அழியாமல் வாழ்கின்றன. இதற்குக் காரணம், அப்பாடல்களைப் பாடிய பாவலர்கள் பலரும் இயற்கை இன்பத்தைக் குறைவற நுகர்ந்து அவற்றின் நுணுக்கத்தை உணர்ந்து பாடியதே ஆகும். அவர்கள் மலைகளெல்லாம் காடுகளெல்லாம் கழனிகளெல்லாம் கடற்கரைகளெல்லாம் பாலை நிலங்களெல்லாம் சுற்றித் திரிந்தவர்கள்; அந்நிலங்களிலே கிடைக்கும் உணவை-இயற்கை உணவை — சுவைத்து அறிந்தவர்கள்; அந்த அந்த நிலங்களின் தட்ப வெப்ப நிலையை அநுபவித்தறிந்தவர்கள். இப்படி அவர்கள் அநுபவிக்கின்ற இயற்கையை வேளையிலே, இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்கின்ற வேளையிலே அவர்களது இதயத்திலே எழுகின்ற உணர்ச்சிகளையும் உணர்ந்தவர்கள்; உணர்ந்து பாடியவர்கள். அதனுல் தான் அவர்களது பாடல்களில் இயற்கைக்காட்சிகளும் மனித இதயத்தில் எழும் உணர்ச்சிக் குவியல்களுமே விரவி வருகின்றன. சங்கப் புலவர்கள் மாட்டு அமைந்திருந்த இந்தப் பேராற்றல்—இயற்கையையும் இதயத்தையும் இணைத்துப் பாடுகின்ற ஆற்றல் — உலகப் பெரும் புலவர் திருவள்ளுவரிடத்தும் அமைந்திருந்தது எனலாம். இதற்கு அவர் பாடிய இன்பத்துப் பாலே சான்ருகும். எடுத்துக்காட்டாக அதிலிருந்து ஒரு குறட்பாவைப் பார்ப்போம்.

தலைவன் சோலைவழியே வந்து கொண்டிருக்கிருன். வரும் வழியிலே மலர்ச் செடி ஒன்று அவனது கண்ணிலே படுகிறது. அச் செடியிலே மலராத மொட்டுகள் பல இருக்கக் காண்கிருன். மொட்டு அழகாக இருக்கிறது. ஆனுல், மலரவில்லை. மலராததால் அதில் மணமும் இல்லை. அதன் மணமானது அந்த மொட்டினுள் அலைந்துகொண்டு திரிகிறது; அடங்கிக் கிடக்கிறது. மலர் மொட்டின் அழகையும் அதனுள் அடங்கிக் கிடக்கும் மணத்தையும் அறிகிருன் தலைவன். அந்த மொட்டு இப்பொழுது இல்லாவிட்டாலும் இன்னும் சிறிது நேரம் தாழ்ந்த பின்னராவது மலர்ந்து மணம் வீசும் என்பதையும் உணர்கிருன். உணர்ந்த அவ்வேளையிலே அவனது இதயத்துள் ஒடுங்கிக்கிடந்த உணர்ச்சி ஒன்று மெல்லத் தலைகாட்டுகிறது. அந்த உணர்ச்சிக்குக் காரணம், ஒரு சிறு நிகழ்ச்சியாகும். அந்த நிகழ்ச்சி என்ருே நடந்தது. அது என்று நடந்தது என்பதுகூட இப்பொழுது அவனுக்கு நினைவில் இல்லை. ஆனுல், அந்த நிகழ்ச்சி மட்டும் அவனது நினைவுக்கிழியிலே ஓவியமாகத் தெரிந்தது.

அழகே வடிவெடுத்து வந்ததைப் போன்ற தோற்றத்தை உடையவள் அவள். அவளை அவன் அதற்கு முன்னர் பார்த்ததுமில்லை, அவளைப்பற்றிக் கேட்டதுமில்லை. எப்படியோ எதிர்பாராத விதமாக அவளை அவன் காண நேரிட்டது; கண்டான்; அவளும் கண்டாள். இருவரும் பேசவில்லை. கண்கள் பேசிக்கொண்டன. அதே நேரத்தில் அவள் அவனைப் பார்த்து தன்னுடைய மலர்போன்ற வெண்மையான பற்கள் வெளியே தெரிய மென்னகை பூத்தாள். மென்னகை பூத்துவிட்டு மெல்ல நடந்து சென்றுவிட்டாள். இவ்வளவு தான் நடந்தது. இதற்குமேல் ஒன்றும் நடக்கவில்லை. ஆனுல், அவனது இதயத்தில் மட்டும் ஒரு விதஉணர்வு — இன்ப—உணர்வு — குடிகொண்டது. நாட்கள் நகர்ந்தன. அதற்குப்பின் அவன் அவளைப் பார்க்கவில்லை. அன்று அவள் அவனைப் பார்த்துப் புன்னகை பூத்ததற்குப் பொருளை

(15-ம் பக்கம் பார்க்க)

# ஒரே மாதிரியாக!

மலர் 16] ஆண்டு சந்தா ரூ. 8 [27—4—58] தனிப் பிரதி 16-காசு [இதழ் 41

வடநாட்டு ஆதிக்கமா? செ! பொய் அது! சொல்லப்போனுல், தென்னுட்டு ஆதிக்கம்தான் வடநாட்டில் ஏற்பட்டு வருகிறது!!—என்று அமைச்சர்கள், பொதுக் கூட்டங்களில் சொல்லுகிருர்களாம்.

நமக்குந் தெரியாமல், அப்படியென்ன ஆதிக்கம் செய்கிருேம்! —என்று மக்கள் திகைக்கு முன்னரே, எந்த ஆதிக்கம் என்பதையும் விளக்கத் தவறுவதில்லையாம், அமைச்சர்கள்.

இட்லி ஆதிக்கம்! — உருவாகி வருகிறதாம். வடநாட்டார் இட்லியென்ருல் வெகு பிரியமாகச் சாப்பிட ஆரம்பித்திருக்கிருர்களாம். இப்படிச் சாப்பிட ஆரம்பித்திருப்பது, 'ஆதிக்கமாம்'! நமக்குப் பதிலளிப்பதற்காக, நமது அமைச்சர்கள், இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு, ஆராய்ந்து பெற்றுள்ள அசைக்க முடியாத ஆதாரம் இது!!

"இட்லி ஆதிக்கமா? கூடாது' முடியாது!! ஒழிப்போம் இட்லிகளை. அழிப்போம் சட்னியை. வீசுங்கள் இட்லிப் பானைகளை," என்று இந்த ஆதிக்கத்தை எதிர்த்து, விரைவில் வடக்கிலே ஒரு போராட்டம் துவங்கும்படி, நமது அமைச்சர்கள், சொல்லிவிட்டு வந்தாலும் வரலாம். அப்போது, வடக்கு தெற்கு பேசும், நமக்குச் சுட்டிக் காட்டி, "பார்த்தீர்களா? வடக்கே, நமது இட்லியை எதிர்க்கிருர்கள். நமது இட்லி வாழவேண்டுமானுல், நீங்களும் வடக்கை எதிர்க்காதீர்கள். ஆலை அணைக்கட்டு இல்லையென்ருலும், தொழிலும் சுகமும் கிடைக்கவில்லையென்ருலும், பேசாமலிருங்கள். ஏனென்ருல், இட்லியைப் புறமுதுகிட்டு ஓடச்செய்துவிடுவார்கள். இட்லி வாழவேண்டுமானுல், டில்லியுடன் சேர்ந்திருப்பதே நல்லது! இட்லி, வடவர்தம் வயிற்றுக்குள் செல்லவேண்டுமானுல், அகில இந்தியா மிக மிக அவசியம்!!", என்று சொல்லலாம் — சுப்ரமணியம்போன்ருேர், அதைப்பற்றி, அரை மணி நேரம் சட்டசபையில் பேசும், வாய்ப்புக்கூடப் பெறலாம்—எதையாவது பேசித் தீரவேண்டும் என்கிற கட்டத்துக்கு ஆளாகியிருக்கும் இவர்கள், அந்த முயற்சியிலீடுபடினும் நமக்கு ஆச்சரியமில்லை!!

ஆனுல், பரிதாபம், இந்த விஷயத்தில்கூட வடக்குக்கு, அவர்களுக்குக் 'கருணை' காட்டுவதாக இல்லை. புதுடில்லியில், ஒரு விழாவில், ஏப். 14-ந் தேதி பேசிய டாக்டர் கேஸ்கர் என்பார், தெரிவித்திருக்கிருர். "இந்தியா முழுமைக்கும் ஒரேவிதமான உணவுப் பழக்கம் இருக்கவேண்டும்" என்பதாக!!

"உன் பேத புத்தி போகவில்லையே? ஒரேமாதிரியான உணவுப் பழக்கம் என்ருல், 'சப்பாத்தி' என்று தானே! அர்த்தம்? ஏன், இட்லி கூட இருக்கலாமன்ருே! எனிப்படி, ஏதானுலும் உன் வாதத்துக்கு மட்டும் ஆதாரமாக்கிக் கொள்கிருய்?" என்று அன்பர் சுப்பிரமணியம் கோபப்படக் கூடும். கேஸ்கர், யார் என்று நாட்டவருக்கு நன்கு தெரியும்! இந்தியை எப்படியாவது பரப்பித் தீருவது என்று கங்கணம் கட்டிக்கொண்டு, அவர் கையிலிருக்கும் 'வானெலி' இலாகாவில், அவர் செய்துவரும் அட்டகாசத்தையும் நாடு அறியும். அப்படிப்பட்டவர் 'இட்லி'யையா ஏற்பார்—ஒரு நாளும் ஏலார்.

**உணவோடு நிற்கவில்லை, அவர் — உடை, பழக்க வழக்கங்கள் யாவும் இந்தியா முழுமையும் ஒரேவிதமாக அமைய வேண்டுமாம்!!**

அவரது ஆசையின் 'அளவினை'ப் பார்க்கும் போது, சிரிப்பும், வேதனையும் கலந்து வருகிறது. உணவும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும்—உடையும் ஒரேமாதிரியாக இருக்கவேண்டும்—அதுதான் போகட்டுமென்ருல், பழக்க வழக்கங்கள்கூட, இமய முதல் குமரிவரை ஒரே மாதிரியாக இருக்க வேண்டுமாம்!!

*

'அல்நாடிர்' கதை பலருக்குத்தெரிந்திருக்கும்—கூடை நிறைய கண்ணுடிச் சாமான்களை அடுக்கிக்கொண்டு வியாபாரத்துக்குக் கிளம்பியவன், இந்தக் கூடை விற்பனையானதும், வரும்இலாபத்தில் நான்கு கூடையாக்குவேன், பிறகு நான்கு பதினுறாகும், பிறகு பெரிய கடைவைப்பேன், பிறகு இலட்சாதிபதியாவேன், பிறகு பிரபு ஆவேன், பிரபுவானதும் நாட்டு மன்னனே தன் மகளைத் திருமணம் செய்துகொள்ளச் சொல்வான், திருமணம் முடிந்ததும் படுக்கையறையில் இளவரசி வந்து நிற்பாள், அவளை 'சீ! போடி' என்று உதைப்பேன்—என்று பகற்கனவு கண்டவனுக எதிரேயிருந்த கண்ணுடிக்கூடையை உதைத்து, இருந்ததும் போயிற்றே என்று பிறகு, கன்னத்தில் கை வைத்துக்கொண்டு விளம்பினனும்!!

'ஏக இந்தியா', ஆக்கிட வேண்டும் என்கிற ஆசையில், கனவு கண்டு கொண்டிருக்கும் 'அல்நாடிர்கள்', ஏராளமிருக்கிருர்கள், காங்கிரசில்.

கேஸ்கர், உணவு — உடை — பழக்க வழக்கம் அனைத்தும் ஒன்றுயிருக்கவேண்டும் என்கிருர்! அது தான், ஒற்றுமைச் சின்னத்துக்கான அறிகுறியாம்!!

இதையே, நாசூக்கான மொழியில் நவில்கிருர்கள்—கோதுமை, எப்படிப்பட்ட சத்துள்ள பொருள்

தெரியுமோ?—இப்படி ஒருவர். இந்தி, ஒரே மொழியாக விளங்கினால் எப்படியிருக்கும் தெரியுமோ?—இன்னொருவர். வீண் பழக்க வழக்கங்களை விட்டுவிட்டு ஒரே விதமாக இருந்தால், ஆகா, பாரத மாதா எப்படிப் பூரிப்பாள் தெரியுமோ?—வேறொருவர். இவ்விதம், இந்தியா என்றால், அது வடக்கே இருப்பவர்களின் சொத்து, வடக்கே எப்படி வாழ்வு இருக்கிறதோ அப்படியே ஏனைய இடங்களும் அமையவேண்டும், என்று ஆசைப்படுகிறார்கள்.

பலர், கேஸ்கர்போல் சொல்லவில்லையே தவிர, அதே ஆசையுடன்தானிருக்கிறார்கள்.

சிலர், அதை 'சமரசமாக'ச் சொல்வதாக நினைத்துக்கொண்டு—வடக்கில் ஒருவித வாழ்க்கை முறை உள்ளது; தெற்கே சில மாற்றங்களைக்கொண்ட வாழ்க்கைமுறை உள்ளது. எனினும், எதனை அதிகம் பேர் கடைப்பிடிக்கிறார்களோ அதை ஏற்றுக்கொண்டு வாழவேண்டும். அப்போதுதான் ஒற்றுமை மலரும். உதாரணமாக, அரிசியைச் சாப்பிடுவோர் கோதுமையும் சாப்பிடப் பழகிக்கொள்ளவேண்டும். ஏனென்றால், உலகிலேயே, கோதுமைதான் சுலபமாகக் கிடைக்கிறது! இந்தியாவில்கூட, ஐக்கிய மாகாணம் போன்ற பெரிய மாகாணங்களில் கோதுமைதான் அதிகமாகக் கிடைக்கிறது, என்கிறார்கள்!!

அதிகம் விளைவதால் கோதுமை — அதிகப் பேர் பேசுவதால் இந்தி—இதே, இலக்கணந்தானே, உடைக்கும், பழக்க வழக்கத்துக்கும் வந்துசேரும்! முதலில் இந்த நோக்கத்தை ஒப்புக்கொண்டுவிட்டால்—அடுத்த கட்டம் வரும்போது,'' இந்திய உபகண்டத்தில், அதிகம் பேர் என்ன உணவும், என்ன உடையும், என்ன பழக்க வழக்கங்களையும் அனுசரிக்கிறார்களோ, அதையே, இந்தி மொழியைப் போல், தேசிய விஷயமாக ஏற்றுக்கொள்ளலாம்,'' என்று சொல்லமாட்டார்கள் என்பதற்கு உறுதி ஏது!!

உள்ளதைச் சொல்லப் பயந்தாலும், பூசி மெழுகிப் பேசினாலும், வடக்கே உள்ளவர்களிடம் ஏக இந்தியாவை உருவாக்கவேண்டும் என்கிற ஆசை அதிகமாக உள்ளது. அந்த ஏக இந்தியா, எல்லாத் துறைகளிலும் ஒரே மாதிரியாக விளங்கவேண்டுமெனும் ஆசையும் அரும்பி உள்ளது.

ஒரே மாதிரி!!—என்கிற ஆசையின் காரணமாகவே இந்தி பொது மொழி என்கிற விதியை அரசியலில் ஒப்புக்கொண்டார்கள். இப்போது, எதிர்ப்புக் கிளம்பியிருப்பதால், அதுபற்றிச்சுற்றியும் வளைத்தும் பேசுகிறார்களே ஒழிய, கேஸ்கர் போன்றோர், இந்தியைப் பரப்பும் விஷயத்தில் தீவிரமாகவே இருந்து வருகிறார்கள்! இன்னும் பத்தாண்டுக் காலத்தில், படிப்படியாக, இந்தி அரியாசனத்தில் அமர்ந்துவிட்டால் பிறகு நிச்சயம், "அதிகம் பேர் சாப்பிடுவது, கோதுமைச் சப்பாத்திதான்,'' "அதிகம் பேர் உடுத்துவது வட நாட்டுப் பாணியில் தான்,'' என்று, இந்திக்கு எந்தக் காரணத்தைச் சொல்கிறார்களோ, அதே காரணத்தைச் சொல்லிக்கொண்டு, அந்தப் பழக்க வழக்கங்களையும் 'தேசியம்' செய்ய நிச்சயம் முற்படக்கூடும்!!

இட்லி ஆதிக்கம் ஏற்பட்டு வருவதாக, இங்குவேண்டுமானால், பக்தவச்சலம் பரமானந்தப்படலாமே ஒழிய, நாளைக்கு அதுபோல் ஒரு கட்டம் வந்தால் சப்பாத்திக்கு, இவர் தலைவணங்கத்தான் செய்வார்.

ஏனெனில், நல்லது, பழைமையானது, என்பதற்காக எதையும் வடக்கேயிருக்கிறவர்கள் ஏற்கும் நிலையில் இல்லை. "அதிகம் பேர்'', என்கிற அளவுகோலை வைத்தே இந்தியைத் திணிக்க முயலுகிறார்கள். நல்லது—பழைமையானது—என்றால், இந்தியத் துணைக்கண்டத்திலேயே தொன்மையானதும் பெருமை வாய்ந்ததுமான தமிழுக்கன்றோ, அவர்கள் மரியாதை செய்திருக்க வேண்டும்? தமிழைவிட இனிய மொழி ஏது! தமிழைவிட தொன்மையான மொழி இந்தியத் துணைக்கண்டத்திலேயே ஏது! எனினும், "அதிகம் பேர்'' பேசுகிற மொழி என்கிற ஒரே காரணத்தைக்கொண்டுதானே, இந்திக்கு இவ்வளவு வக்காலத்தும் வாங்கப்படுகிறது!!

**உணவு — உடை — பழக்கவழக்கங்கள் அனைத்தும் ஒரேமாதிரியாக இருக்கவேண்டுமாம்.**

கேஸ்கரின் ஆசையின் அளவினைப் பார்த்திடின் திகைப்பைவிட, அவர் எந்த நூற்றாண்டிலிருக்கிறார் என்கிற ஐயமே உருவாகிறது நமக்கு! இவை ஒரே மாதிரியாக அமைந்துவிட்டால், அகில இந்தியா முழுவதும் ஒன்றாகிவிடுமாம்!!

தமிழர் — ஆந்திரர் — கேரளர் — கன்னடியர்—மராத்தியர்— பஞ்சாபியர்—அசாமியர்—ஒரிசாவினர் பீகாரிகள்—வங்காளிகள்—ஐ.மா.வினர்—ராஜபுதனத்தார் — இப்படிக் கூறப்படுகிறதல்லவா! இதெல்லாம் ஒழிந்து, "எல்லோரும் இந்தியர்'' என்கின்ற நிலைமை ஏற்படவேண்டுமாம்!! ஆசையை அமைச்சராக இருக்கும் இவர் ஏன் இந்தளவோடு நிறுத்திக்கொண்டார் என்பது தெரியவில்லை. ஐரோப்பா, அமெரிக்கா, இரஷ்யா, ஆபிரிக்கா, ஆஸ்திரேலியா, பிரான்ஸ், பெல்ஜியம், சீனா இப்படியிருக்கும் உலக நாடுகள் யாவும், உணவு—உடை—பழக்க வழக்கங்கள் எல்லாவற்றிலும் ஒரே மாதிரியாக விளங்கும் வகையில் ஒரே மனித இனமாக ஏன் வாழக்கூடாது என்றும் கேட்டிருக்கலாமே! எவ்வளவு பெரிய பரந்த மனோபாவம் தென்பட்டிருக்கும்! எவ்வளவு பெரிய விசால இதயம் படைத்தவர் என்று விளங்கியிருக்கும்!! அப்போதுமட்டும், 'இந்தியா' என்று ஒன்று தனியாக இருக்க வேண்டும் எனும் சபலம் வந்துவிடுகிறது போலும்.

உலக முழுதும் ஒரே நாடு—உலக முழுதும் ஒரே ஆட்சி, என்கிற கூற்று, காதுக்கு இனிப்பானது மட்டுமல்ல, அப்படிச் சொல்கிறவருடைய விசாலமான இதயத்தைக் காட்டுமேயொழிய, கவைக்குதவாது. அப்படிச் சொல்கிறவரையும் 'ஒரு மகாத்மா' என்று அழைக்கலாமே ஒழிய, இன்றைய உலகில் அது, நடக்கவேமுடியாது.

உலகில் வாழும் மனித இனம் யாவும், ஒன்றுதான் என்கிற நல்ல சித்தாந்தத்தை இப்படிப்பட்ட உணவு—உடை—பழக்க வழக்கங்களை ஒன்றாகவே இருக்கும்படி செய்துவிடுவதால், ஏற்படுத்திவிடமுடியாது.

ஏனெனில், இவையாவும் புறத்தூய்மையின் சின்னங்கள்! புறத்தை ஒன்றாக்கிவிடுவதால், அகம் தூய்மையாகிவிடும் என்று யாரும் கருதிவிட முடியாது!! அகம், தூய்மையாக விளங்க உலகைய்

(13-ம் பக்கம் பார்க்க)

# கருணை காட்டலாம்

[ வண்டு ]

கண்ணே—மணியே — கற்பூரப் பெட்டகமே — சின்னஞ் சிறு கிளியே — தேனே — என் செல்வமே, என்று பாடத்தெரியாவிட்டாலும், உணர முடியாதவளல்ல அந்தத்தாய்! ஓடிவரும்போதும், 'அழகு வாய்திறந்து 'அம்மா' வென அழைக்கும்போதும், கன்னத்தைக்காட்டியும் காலே உதைத்தும் சேட்டைகள் செய்யும் போதும், களிக்கமுடியாத மரக்கட்டையல்ல அந்தமாது!! "நான் 'உண்டாகியிருக்கிறேன்' அத்தான்!'' என்று வெட்கத்தோடு கூற, அப்படியா என்று அவன் ஆசையோடு அணைத்து, "ஆணு பெண்ணு, எது பிறக்கும்?'' என்று கேட்க, "எதாளுலும் என்ன! இரண்டும் செல்வம்தானே!!'' என்றிவள் பதில் கூற, "பேசாதடி கண்ணே! நீ பேசினால் கூட உன் வயிற்றிலிருக்கும் வைரத்துக்கு ஏதாவது நேர்ந்திடுமோ என்று பயப்படுகிறேன்!!'' என்று இவன் ஆசைகளைத் தேக்கிப் பேச, ஒன்று—இரண்டு—மூன்று என்று, பத்து மாதங்களை ஓட்டி, படாதபாடுபட்டு, தான் பெற்றெடுத்த பேசும் பொன் சித்திரத்தின் அருமை தெரியாதவளல்ல எஸ்தர் அம்மையார் — எனினும் ஈனற்றிலே வீசி எறிந்தாள்! கொன்றாள்! குற்றவாளிக் கூண்டிலே கொண்டுவந்து நிறுத்தப்பட்டாள்!!

சித்தப் பிரமையோ, புத்தி சுவாதீனமில்லையோ? கள்ளக் காதலன் தேடினாளோ, அவன் கைவிடச் சொன்னானோ? — என்றெல்லாம், ஏசவும், பேசவும் தோன்றும்.

"பாதகி! எப்படிச் செய்தாள் இக்கொடுமையை? ஈசன், எல்லாம் வல்லவன் அவளுக்கு என்ன கூலிகொடுப்பார், தெரியுமா! ரௌரவாதி நரகத்துக்குப் போகத்தான் போகிறாள்'' என்று பக்த கோடிகள், சபிப்பர்.

"சே சீ சீ! என்னமனமய்யா? ஒரு குழந்தையைக் கொல்லலாமா — மழலையின் நிழலிலேதானே நான் மகேசனைக் காண்கிறேன்—எதிர்கால உலகம் அல்லவா அவைகள் — எப்படி அவளுக்கு இந்தத் தைரியம் வந்தது?'' என்று நேரு அவர்கள், கேள்விப்படின், சொல்வார். நிகழ்ச்சி நடைபெற்ற நாட்டில், மனிதமனம் எந்தளவுக்கு மறைந்து வருகிறது, அன்பைப்பற்றி இயேசு என்ன சொன்னார்—புத்தர் போதித்தது என்ன — காந்தியடிகளின் தத்துவம் யாது என்பதுபற்றி, நெஞ்சுருக எடுத்துரைப்பார்.

அந்தத்தாய்— எஸ்தர் அம்மை —ஆனந்தத்தோடு, இந்தக் காரியத்தைச் செய்யவில்லை. செய்வது பாவம் என்று உணராமலுமில்லை —இருந்தும் செய்தார்!! ஏன்?—கோர்ட்டிலே, கேட்டார்கள்—ஏன் கொன்றாள்? — கிடைத்தபதில், வேடிக்கையானது அல்ல நெஞ்சம் விம்மக்கூடியது!!

*

"மாலையிட்டேன் ஒருவருக்கு! இரவு போய், இந்தக் காலை ஏனோ மலர்ந்தது, என்று ஒவ்வொரு நாளும் நாளும் அவரும் கலக்க மடைவோம். மாடி வீடும், மவுசான வாழ்வுமல்ல எங்களுடையது! கூரைக் குடிசையும், 'கொண்டு வந்தால்தான் சோறு' என்கிற பிழைப்பும்தான்!! இன்பத்தைப் பகிர்ந்து கொண்டதுபோல, பசியையும் பங்கு போட்டுக் கொண்டோம். இப்படியே, வாழ்நாள் முழுதும், இருந்தால்கூடப் பரவசியில்லை என்றுதான் நான் எண்ணினேன்! ஏனெனில், பசியையும் போக்கும் ஆசைக் கண்ணாளனின் அமுத முகம் போதாதா ஒரு பெண்ணுக்கு—'அவர்' தானே சகலமும்!! சட்டியில் எனக்கு இல்லாவிடினும், அவருக்குப் போட்டுவிட்டு, அவர் உண்பதைப் பார்க்கும் அகமகிழ்ச்சியிலேயே எனக்கு வயிறு நிரம்பிவிடும். இப்படி வாழ்ந்து கொண்டிருந்தபோது, என்னைக் கைப்பிடித்தவர், வேலையினின்றும் ஒருநாள் திரும்பவில்லை! விசாரித்ததில், விபரமும் கிடைக்கவில்லை!! நாட்களை விரலிலும், விழிகளை பாதையிலும் வைத்தபடி கழித்தேன். இந்த நிலைமையில், நான் கர்ப்பவதி. இயற்கைக்குத் தெரியுமா என் கஷ்டம்? உள்ளத்தில் வேதனைச் சுமை! வயிற்றிலோ இன்பச் சுமை!! குழந்தை பிறந்தது. தந்கத்தாலான தொட்டிலிலே, தாதியர் தாலாட்டுப் பாடி வளர்க்கக்கூடிய நிலையா என்னுடையது? அல்லவே! என் அழுகைதான் குழந்தைக்குத் தாலாட்டு! கண்ணீர்தான், கானம்!! குழந்தை பிறந்திருக்கும் என்பதை நினைத்தாவது 'அவர்' வருவார் என்று எண்ணினேன்; எதிர்பார்த்தேன்; ஏமாந்தேன். போனவர், திரும்பவேயில்லை. புழுதி மேடுதானு, என் வாழ்வு என்று புலம்பினேன்! ஆதரவு, யார் இனி? என்று அழுதேன்!! ஐயோ, ஆண்டவா, என்று ஓலமிட்டேன். நான் அழுது வடித்த கண்ணீரும், தூங்காது விழித்த இரவுகளும், ஏராளம்! ஏராளம்!! இவையாவும், பசியால் உருக்குலைந்த என் உடலை, இன்னும் சீர்கேடுறச்

செய்ததே தவிர, சென்றவரைக் கொணரவில்லை. என் செல்வமோ, எந்தக் கவலையுமின்றி, வளர்ந்தான்! வளர்ந்தான்-என்று ஒரே வரியில் சொல்லிவிட்டேன் — ஆனால், அவன் வளர்ந்த இந்த இரண்டு ஆண்டுகளிலும் நான் பட்டபாடு சொல்லி முடியாது. பிள்ளைத்தாச்சி, என்பதால் நான் கர்ப்பவதியான காலத்திலும்— இளம் பிள்ளைக்காரி என்பதால் பிறகும்—அக்கம் பக்கத்திலிருப்போர் ஆதரவு காட்டினார்கள். அவர்களுமென்ன, இரண்டு உயிர்களுக்கு 'இலவச' உணவு அளிக்கக்கூடிய சீமான்களா! இல்லையே!! வயது இரண்டாகிவிட்டது, குழந்தைக்கு. பிணியும் பசியும் நிறைந்த என் பாலைப் பருகியதாலோ என்னவோ, அடிக்கடி நோய்க்கு ஆளானான் குழந்தை—இனியும், சும்மாயிருந்தால் முடியாது என்று இளம்பினேன். எத்தனையோ இடங்களில் போய் வேலை கேட்டேன். "போடீ!", என்றும், பிள்ளையைக் கவனிப்பாயே ஒழிய, நீ வேலையையா கவனிப்பாய்?", என்றும் விரட்டினரே ஒழிய, வேலை தரவில்லை எவரும். நான் குழந்தைபெற்றவளாம்! அதையே ஒரு காரணமாகக் காட்டினர்!! அவர்களுக்கு என்ன, என் கஷ்டத்தைப் பற்றிக் கவலை? கொடுக்கும் சோற்றுக்கும் துணிக்கும், நான் சரியாக உழைத்தால்தானே அவர்களுக்கு இலாபம்! என்ன செய்வது என்று யோசித்தேன். யாராவதுசொந்தக்காரர்கள் இருந்தாலாவது, குழந்தையை விட்டு வைக்கலாம். கண்ணீரும் பசியும் தான் எனக்கு உறவினர்கள்! வேறு யாருமில்லை!! இந்த உறவினர்களிடம்தான், அவன் பிறந்ததுமே, ஒப்படைத்து விட்டேனே? அனாதை ஆசிரமம் ஒன்று இருப்பதாகவும், அங்கு குழந்தையைச் சேர்த்துவிடும்படியாகவும் ஒருவர் சொன்னார். நல்ல யோசனை! குழந்தையாவது கஷ்டமில்லாமல் வளரட்டும்!! — என்கிற ஆசையோடு, அங்கு போனேன். அனுமதி, இடைக்கவில்லை. எனக்கு ஆத்திரம், ஆத்திரமாக வந்தது அதே வேகத்தில், இணற்றடிக்குப் போனேன்—என் குழந்தையைப் போட்டுவிட்டேன். அதற்குள் போலீசார் என்னைப் பிடித்துவிட்டார்கள்."

*

"வறுமை நிலை!

பிழைப்புக்குத் தடையாயிருந்தது!!

இவைகளைக் கவனித்தால், எதிரியின் செய்கை கொடூரமானது என்று கூறுவதற்கில்லை...",

என்று, நீதிபதி குறிப்பிட்டிருக்கிறார். எனினும், சட்டம் விடுமா? அதனால், அந்த மாதுக்கு, ஆயுள் தண்டனை அளித்து, கருணை காட்டலாம் என்றும் சர்க்காருக்குச் சிபாரிசு செய்திருக்கிறார்!!

வறுமை நிலை—என்பது, நீதிபதியின் தீர்ப்பு.

வழக்கும் நிகழ்ச்சியும் வெளிநாட்டிலே நடந்ததல்ல! தமிழகத்திலே, திருநெல்வேலியிலே, நிகழ்ந்ததுதான்!!

தங்கத்திலே கலசம்—வெள்ளியிலே தேர்—முத்திலே பல்லக்கு—வைரத்திலே மூக்குத்தி—பல்லாயிரக்கணக்கான ஏக்கர் நிலம்—கொண்ட கோயில்கள் ஏராளம் உண்டு!

இளிகொஞ்சும் சோலைகளும், கதிர்குலுங்கும் கழனிகளும், காவிரியும் வைகையும், கத்தும்கடலும் ஆங்கே முத்துக் குவியலும், முகிலைக்கிழிக்கும் மலைகளும் அங்கே'டாலர்' குவிக்கும் பொருள் வகைகளும், இருக்கின்றன, ஏராளமாக!! இருந்தும், இங்கே, எஸ்தர்அம்மையார்களும், இருக்கிறார்கள் —ஏட்டில்வந்தது, இவ்வழக்கு; ஏட்டில் வராத நிலையில் உள்ள சம்பவங்கள், எத்தனையெத்தனையோ.

குழந்தைகளைக்கொல்லும்,தாய்! தூக்கிலே தொங்கும் கணவன்! குரல் வளையை நெரிக்கும் குடிகேடன்! கொலை செய்யவும் தயங்காத தரித்திரம் பிடித்தவன்!— ஏராளம், இருக்கின்றனர் நாட்டில்.

இதே சேதிகளைப் படிக்கும் ஏட்டின் இன்னொரு மூலையில்தான், திருப்பதி வெங்கடாசலபதிக்கு ஒரு மாதத்தில் எத்தனை இலட்ச ரூபாய்கள் உண்டியலில் விழுந்தன என்கிற சேதியும் வருகிறது.

இப்படி ஒருத்தி குழந்தையைக் கொன்றாள் என்கிற சேதியை, திருப்பனந்தாளிலோ, திருவாவடுதுறை ஆதீனத்திலோ போய்ச் சொல்லிப்பாருங்கள். தங்கப்பாதக் குறடு மின்ன — காதிலே வைரங்கள் ஜொலிக்க — உடம்பிலே நவரத்னங்கள் மின்ன — வெள்ளி ஆசனத்திலே அமர்ந்தபடி, 'முற்றுந் துறந்தவராய்' விளங்கும் சந்நிதானங்கள், தேவாரத்தையும் திருவாசகத்தையும் எடுத்துப் புரட்டி, அவள் செய்த காரியம் எத்தகைய பாவகரமானது என்பதைப்பற்றிச் சித்தமுருக்கும் விதத்தில் உபன்யாசம் செய்யத் தயங்கமாட்டார்கள்! ஆனால் ஒரு குழந்தையின் உயிர் வீணைப் போய்விட்டது—ஒரு தாய், ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளாகி, ஆயுட் தண்டனை பெற்றாள்—நாட்டிலோ, வீணைம்பணம் நிறைய இருக்கவே இருக்கிறது!

"சுமார் 18-கோடிதான், கோயில்களில் இருக்கும் சொத்து, அதிகம் இருக்காது"

என்று சொல்லுகிறார்கள்! ஏதோ, கோடி என்பது, சாதாரணம் என்பதுபோலக் கருதிக் கொண்டு!!

எஸ்தர் அம்மாள்போல் குழந்தைகளைக் காக்கவும் வழியில்லாமல் அலைவோர் ஏராளம் உண்டு. குறைந்தபட்சம், இது போல நாதியற்ற ஒரு பத்துக் குழந்தைகளையாவது பராமரிக்கும் பொறுப்பை, ஒவ்வொரு கோயிலுக்கும் கொடுக்கலாம்.

தமிழ்நாட்டிலுள்ள வறுமையையும், வேலையற்ற நிலைமையையும், அடியோடு தீர்க்க முடியாவிட்டாலும், கோயிலுக்கு ஒரு பத்துக் குழந்தைகளை வைத்துக் காப்பாற்றுமளவுக்கு வழியிருக்கிறது.

அமுத திருஞானசம்பந்தருக்கு அன்னை பார்வதிப் பிராட்டியை அனுப்பி, பால் கொடுக்கச் சொன்ன, பரமதயாளன், இப்படி ஒரு நற்செயலுக்கு அரசாங்கம் உத்தரவிடுமேயானல் களிப்பார்! கருணைபாலிக்கவே செய்வார்— ஏனெனில், அவருக்கே அனாதை ரட்சகன் என்றொரு பெயரும் உண்டே!!

★

# வரலாறு காட்டும் பாடம்

இன்று நாட்டில் நடப்பது மக்களாட்சி, இலக்கணப்படி இல்லாவிட்டாலும், சட்டப்படி. இங்கு ஓர் கட்சியின் மதிப்பு, சக்தி எல்லாம் சட்டசபையில் தான் அடங்கியுள்ளது. சட்டசபையில், கட்சியின் சக்தி, பலம் கருத்து எண்ணத்தில் இல்லை, தூக்கப்படும் கையெண்ணத்தில்தான் அடங்கியுள்ளது. ஆகையால் விடுதலை விரும்பும் நாம், தவறான பாதை அழிவுப் பாதை என்பதை அறிந்திருக்கிற காரணத்தால், ஜனநாயக முறைப்படி நாட்டை நமதாக்க, சட்டசபை நுழைவைக் கைக்கொண்டோம். அதன் காரணமாக வெற்றி பெற்ற நம் பிரதிநிதிகள், சம்பிரதாயப்படி பிரமாணம் எடுத்தனர். அதனால் நமது 'பிரிவினைக் கொள்கை' பிளவு பட்டுவிட்டதாகவோ, கொள்கை குன்றிவிட்டதாகவோ கூறுவோர்; வரலாறு, இலக்கியம் ஆகியவற்றைப் படிக்காதவர் என்று கூறுவதற்கில்லை — வரலாறு, இலக்கியம் ஆகியவற்றை மறந்தவர்கள், என்றுதான் கூறவேண்டும்.

*

"சட்டசபையில், வெற்றி பெற்று வந்த அங்கத்தினர்கள் பிரிட்டிஷ் மன்னரிடம் பக்தி கொண்டிருப்பதாக இராஜ விசுவாசப் பிரமாணம் செய்ய வேண்டும்." என்று விதி இருந்தது.

என்ன செய்வது, நாட்டின் விடுதலையில் நாட்டம் கொண்டவர்கள், சாவைச் சாதாரணமாக்கிக் களம்பல கண்டு, வீழ்ச்சிபல ஏற்று, வாகைபல சூடி—கடைசியில் தேர்தலில் வென்று வந்தும், எந்த பிரிட்டிசாரின் ஆட்சி கூடாதென்றார்களோ, எந்தப் பிரிட்டிசாரைப்பிடரியில் அடித்துவிரட்ட வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டார்களோ, அந்தப் பிரிட்டிசாரின் மன்னருக்கு விசுவாசமாகப் பிரமாணமா? இந்த இழி நிலையை ஏற்றுக்கொள்ளவா களத்திலே பலரைக் காணிக்கையாக்கினோம். சேசேசே வேண்டாம், சட்டசபைக்குள்ளேயே செல்ல வேண்டாம்! வெளியில் இருந்தே நாட்டை வாங்குவோம்!!—என்று "முட்டுக்கட்டை" போட்டனர், விடுதலை விரும்பிகள், அயர்லாந்திலே!

**நெல்லை-நல்லான்**

இந்த 'முட்டுக்கட்டை'யையும் உடைத்தெறிய வேண்டும் என்ற எண்ணத்தாலும், விடுதலை விரும்பிகளைச் சட்ட சபையைக் கைப்பற்றாமல் செய்யும் வகையிலும், விடுதலை வேண்டிகளின் நிலையைச் சாதகமாகக்கொண்டு ஏகாதிபத்திய ஏஜண்டு ஆட்சியினர் ஓர் திட்டம் கொண்டுவந்தனர். அது 'நுட்பமான' திட்டமாகையால் சட்டமாகியது!!

"தேர்தலுக்கு அபேட்சகராக நிற்க விரும்புவோர், ஒவ்வொருவரும் முதலில் ராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்த பின்னர் தான், தேர்தலில் நிற்க வேண்டும்!"

விசித்திரமான சட்டம், விந்தையான சட்டம்! விடுதலை விரும்பிகளை மட்டம்தட்டக் கொண்டுவரப்பட்ட சட்டம்!! விடுதலை விரும்பிகளுக்கு மிக நெருக்கடியான சட்டம்.

விடுதலை வீரர்கள் குமுறினர், கொந்தளித்தது அவர்கள் உள்ளம். விடுதலை வாங்கவேண்டும் என்பதற்காக, சட்டசபையைக் கைப்பற்ற வேண்டும் என்று தேர்தலில் நின்று, வென்றும் வந்தால், முதலிலாவது வென்ற பின் பிரமாணம் எடுக்கவேண்டும், இப்பொழுதோ தேர்தலில் நிற்பதற்கு முன்னரே விசுவாசப் பிரமாணம் எடுக்க வேண்டுமாம்!

விடுதலை வேழங்களுக்கு வேட்டு வைப்பதைப்போல் இருந்தது இந்தச் சட்டம். வீரர்கள் விழித்தார்கள், முகம் சுளித்தார்கள், தங்கள் தலைவர் ஈமன் டி வாலராவை நோக்கினார்கள்! ஈமன் டி வாலரா விண்ணை நோக்கினான். என்ன செய்வதென்று தெரியவில்லை. எப்படியும் சட்டசபையையும் கைப்பற்ற வேண்டும், மன்னனுக்கும் விசுவாசப் பிரமாணமும் எடுக்கக் கூடாது. இக்கட்டான நிலைதான்! ஈமன் டி வாலராவின் எண்ணங்கள் சிதறின—அவனது அடிமை நாடும், அவர்கள் அடிமையை ஒழிக்கக் களத்திலே கொடுத்த காவும், அவர்களின் நிலையும் மனத் திரையில் ஒளிப் பிழம்பாய் ஊசலாடின...

*

கிறிஸ்து பிறப்பதற்கு 1929-ஆண்டுகளுக்கு முன்பு ஐரோப்பிய தேசங்களில் எல்லாம் மிகப் பழமையானது என்று கூறப்படும் அயர்லாந்தில், ஸிதியன் என்றொரு கூட்டத்தார் வந்து குடியேறினர்கள், முதன் முதலாக! குடியேறிய அவர்கள், வாழ்க்கையைச் செப்ப

விட்டு, செம்மையாக வாழ்ந்து தங்களுக்கே ஒரு புதிய நாகரீகத்தை உண்டாக்கிக் கொண்டார்கள்.

இங்கிலாந்து போன்ற நாடுகள், 'நாடுகளாய்' இல்லாத காலத்தே —பிரிட்டிசார், அநாகரிகர்களாய், முரடர்களாய் முட்டாள்களாய், உண்ணவோ உடுக்கவோ உயர்ந்த ஓர் முறையின்றி, உறையவோ ஒழுகவோ உன்னதமான நன்னெறியின்றி, வாழ்ந்த காலத்தே — அயர்லாந்துக்காரர்கள் தனி நாகரிகர்களாய், நாகரிகத்தின் உச்சியை நிச்சயமாக்கிக் கொண்டு வாழ்ந்தனர். அரசியலும் நல்லவகை அமைப்பாய், பல சிற்றரசுகள் மக்களை ஆள, ஓர் பேரரசன் சிற்றரசர்களைக் கண்காணிக்க, செம்மையாக - சிறப்பாக, அடிமையின்றி அமைதியாக, தக்காரும் மிக்காருமின்றி, வழி வழி வாழ்ந்து வந்தனர்— காலமும் கழிந்தது.

அடிமையையே அறியாத நாடு அடிமையானது. அதுவும் தனக்கு மிக மிகப் பிற்பட்ட காலத்தே, கலத்தையும் கழனியையும் கண்டு வாழ்ந்த பிரிட்டிசாரிடம்! இத்தனைக்கும் காரணம் ஓர் சிற்றரசனின் சேட்டை! அச்சிற்றரசன் மற்றொரு சிற்றரசனின் மனைவியை ஏமாற்றி அழைத்துச் சென்று விட்டான். விஷயம் பேரரசனிடம் சென்றது, அவளை உற்றவனிடம் விட்டுவிடும்படி அந்தச் சிற்றரசனுக்கு ஆணை பிறப்பிக்கப்பட்டது. வஞ்சங் கொண்ட சிற்றரசன், ஆங்கில மன்னனை இரண்டாம் ஹென்றியிடம் தஞ்சம் புகுந்து, "நாயகனே, தாசன் நான் உனக்கே! நேசம் கொண்டு, எனது தேசம் வந்து, எனை ஆட்கொள்வாய் ஐயனே! மெய்யனே! —இது மெய்யதுவே!!" எனக் கூறிக் கைகூப்பினன். வணங்காத கைகள் வணங்கின! தாளாத முடி, மன்னனின் அடிகளின்மேல் பட்டது. வரலாற்றின் ஏட்டிலே ஒரு பெரும் கரும்புள்ளி தோன்றியது.

வேளை வராதா என வெதும்பிக் கிடந்த பிரிட்டிசார், மெள்ள மெள்ள அயர்லாந்தில் கால் வைத்தனர். குள்ளநரி ஒருவன் காட்டிய வழி காட்டின் நாலா பக்கமும் அடிமைத் தீ வளர வெய் வார்த்தது. கொள்ளை கொள்ளையாகச் செல்வம் இங்கிலாந்து சேர்ந்தது. இங்கிலாந்து வளர்புரி ஆக ஆக, அயர்லாந்து வறுமை புரியாக மாறியது.

ஏகாதிபத்தியத்தின் இரும்புத் திரையைக் கிழிக்க எத்தனையோ குமுறல்கள் எழுந்தன. ஏகாதிபத்தியத்தின் இருள் திரையை ஒழிக்க விடிவெள்ளிகள் பல முளைத்தன. உமியுள் நெருப்பாய் புகைந்த விடுதலைத் தீ காலக் காற்றால் புரட்சியாகச் சுடர்விட்டது. வரட்சியான புரட்சிக்கு ஊட்டம் கொடுக்க தோன்றினன் மாவீரன் ஈமன் டி வாலரா. அதன் பயன் பக்குவமான நிலை சமைக்கப்பட்டது. கி. பி. 1916-ல் ஈஸ்டர் கலகம் எழுந்தது. புரட்சி வீரர்கள் புதுத் தெம்புடன் போரிட்டனர். டப்ளின் நகரம் ஒருவாரம் புரட்சிக் காரர்களின் கையில் சிக்கியது, என்றாலும் வீழ்ச்சிதான் விரும்பிதாகியது, விடுதலை விரும்பிகளுக்கு! ஈமன் டி வாலரா உள்ளிட்ட வீரர்கள் கூட்டம், கொட்டடிக்குள்ளானது. ஏகாதிபத்திய வெறியர்கள் கொக்கரித்தனர், கோரமாய்ச் சிரித்தனர். புரட்சி வீரர்களுக்கு தூக்குத் தண்டனை கொடுத்தனர். சொந்தப் பூமிக்காக வந்தவனிடம் உயிரை அடைக்கலமாக்கிய மாவீரர் கோட்டம் மகிழ்ச்சியுடன், மரணத்தை மாலையாக ஏற்கத் தயாராகினர். இடையில் தூக்குத் தண்டனை மாறித் தீவாந்திரத் தண்டனைத் தரப்பட்டது. காரணம்?

அயர்லாந்தின் அடிமைச் சிறையைச் சுக்குநூறாக்க சூள் உரைத்து அல்லும் பகலும் அயராது உழைத்த ஈமன் டி வாலரா அமெரிக்காவில், ஒரு ஸ்பானியருக்கும் ஓர் ஐரிஸ்காரிக்கும் மகனாய் உதித்தவர். ஓர் அமெரிக்கன் மரண தண்டனையை அடைவதா, கூடாது, கூடாது, நடக்கவிடக் கூடாது— விண்ணப்பித்தது அமெரிக்கா, ஏகாதிபத்தியத்தின் குண்டு உருவமாம் பிரிட்டனிடம்! அப்போதைய ஐரோப்பிய யுத்தத்தில் அமெரிக்காவின் உதவியைப் பிரிட்டன் நாடியதாலே, அமெரிக்காவின் சொல்லைத் தட்டிக்கழிக்க முடியவில்லை, பிரிட்டனால். இரு தலைக்கொள்ளி எறும்பாய்த் தவித்த பிரிட்டன், புரட்சிக்காரர்களின் மரண தண்டனையை மாற்றி, மாற்றுத் தண்டனையைக் கொடுத்து, பின்னர் அதுவும் முடிந்தது.

1917-ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த லாயிட் ஜார்ஜ் புரட்சி வீரர்களை, காராக்கிரகத்தினின்றும் காலி செய்யச் செய்தான். "தீவாந்திரதிட்சை" பெற்றுச் செல்லவேண்டிய வீரர்கள், வேங்கைகளாய் வெளியில் வந்தனர். அப்பொழுதும் அவர்கள் சிந்தை விடுதலை விடுதலை என்றுதான் சூள் உரைத்துச் சுருதி பாடின. அப்பொழுது ஐரிசின் சுதந்திர இயக்கமாய் இயங்கிக் கொண்டு வந்த 'ஷின்பீன்' இயக்கத்தில் சேர்ந்தனர், ஈமன் டி வாலராவும் அவரைச் சார்ந்த பிறரும்! நெய்யும் நெருப்பும் சேர்ந்தது போல் ஆகிவிட்டது. விடுதலைத் தீ வேகமாக வளர்ந்தது. முனுமுணுப்பும் மூட்டைக் கடியும் சேர்ந்தது போலாகிவிட்டது' என்று எண்ணினர் ஆட்சியாளர்! மூர்க்கத் தனத்தைக் கைக்கொண்டேனும் எங்கள் செயலை முடிப்போம் என்று ஏகாதிபத்தியக் கூலிப் படைகள், 'லாலி' பாடின!!

ஷின்பீன் இயக்கம் நாளுக்கு நாள் நாடுகாக்கும் நல்ல தம்பிகளால் வளர்ந்தது. ஷின் பீன் இயக்கத்திற்கு ஈமன் டி வாலரா தலைவரானர். விடுதலைத் தீ கொழுந்துவிட்டுப் பிரகாசித்தது. ஈமன் டி வாலராவை, ஆள்பவர்கள் கைது செய்து சிறைத்தாக்கத்தைத் தீர்த்தனர். ஈமன் டி வாலராவும் தனது விடுதலைத் தாகத்தைத் தீர்க்கவேண்டி, தந்திரமாக சிவாஜியைப்போல் தப்பி வந்தார். அவ்வளவுதான்; தடைபட்ட வேகம் மடை திறந்த நீராய்ச் சீறிப் பாய்ந்தது. புரட்சி நாலா பக்கமும் தோன்றியது. பிரிட்டிஷ் பட்டாளமும் புரட்சி வீரர்களும் மோதினர். கழனியும் காடும் களமாயின. அடுக்களையிலிருந்து அந்தப்புரம் வரை விடுதலைக் காதை தீட்டப்பட்டது. பாவலரும், நாவலரும் நாடுகாக்கும்காவலராய்ப் பீடுநடை போட்டனர். மாடமாளிகையும் மண் குடிசையும் சுதந்திரப் பண் பாடின. நாடெங்கும் போர்க் கோலம் — அயர் மக்களுக்குச் 'சோதனை காலம்' எங்கும் புரட்சியின் உத்வேகம், உச்சக் கட்டம்! நாடெங்கும் இரண களம் இரத்தக் களரி, பிணமலை, அழுகுரல்! வட்டமிடும் வல்லூறுகளுக்கு வரப்பிரசாதம்!!

கண்டான், சற்றுக் கவலையும் கொண்டான் — முன்னர் புரட்சி





வீரர்களை விடுதலை செய்த ஏகாதிபத்தியக் காவலன் லாயிட் ஜார்ஜ். உடனே, 1921-ல் சமரசப் பேச்சுக்குத் தயார் என்று, தலையாட்டினன் இலண்டன் மாநகரிலே பேச்சு நடந்தது. அங்கு தனது நண்பர்களை அனுப்பினன் ஈமன் டி வாலரா-ஓர் உடன்படிக்கையோடு, சென்ற தோழர்கள் திரும்பினர்! ஒரு 'பாகிஸ்தான்' பிறந்தது!!

உடன்படிக்கைப்படி அயர்லாந்து —ஒரே நாடு, ஒரே ஏகாதிபத்தியத்தின் கீழ் இருந்த நாடு—ஒரே நில அமைப்பைக்கொண்ட நாடு-அது மட்டுமல்ல, காலா காலமாக, வழி வழியாக ஒன்றாய் இருந்த 'ஏக அயர்' — அத்தோடு மட்டுமின்றி, ஒரே இனத்தவரைக் கொண்ட அயர்லாந்து, பிளவுபட்டது! அயர்லாந்தின் வடபாகம், அல்ஸ்டர் என்ற பகுதி, ஆறு ஜில்லாக்களைக் கொண்ட பகுதி-புராட்டஸ்டண்டு கிறித்தவர்கள் என்ற காரணத்தால் பிரிந்து, பிரிட்டனின் நேர் பார்வைக்குள் வந்தது. மீதி கத்தோலிக்கக் கிறித்தவர்களைக் கொண்ட பகுதி டொமினியன் அந்தஸ்தைப் பெற்றது, வில்லியம் காஸ்கிரேவ் தலைவரானன். அவன் சரியான ஏகாதிபத்திய ஏஜண்ட்! ஆங்கிலேயருக்கு அடி தாங்குவதில் அலாதி ஆசை கொண்டவன்!! பலவகையான அடக்கு முறைக் குண்டுகளை வீசினன், கண்டபடி பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டான். 1923-ல் மாவீரன் ஈமன் டி வாலரா மறுபடியும் சிறைக் கம்பிகளுக்கு பின்னே தள்ளப்பட்டான். ஆனல் அடுத்த ஆண்டே விடுதலை பெற்றன். பல தடவை வில்லியம் காஸ்கிரேவ் கோஷ்டிக்கும், ஈமன் டி வாலராவின் கோஷ்டிக்கும் போர் மூண்டிருக்கிறது. போர் என்றால்......?

களம்பல கண்டு கண்டு, களத்திலே காவுகொடுத்துக்கொடுத்து அலுத்துப்போன ஈமன் டி வாலரா போர்த்திட்டத்தைப் புதிதாகத் தீட்டினன். அராஜகத்தை முதலாகக் கொண்ட வேட்டுமுறையை விட்டு, அகிம்சையை முதலாக —மூலமாகக் கொண்ட ஓட்டுமுறையைத் தேர்ந்தெடுத்தார். அயர்லாந்தில், இப்பொழுது அல்ஸ்டர் போக மீதியுள்ள பகுதி டொமினியன் அந்தஸ்தைப் பெற்றுவிட்டது. வேட்டுமுறை இரத்ததானம் செய்யவேண்டியிருப்பினும், அதிகப்பயனும் இடைக்காத காரணத்தால், காந்தியின் முறையைக் கைக்கொண்டு, வோட்டு முறையைத் தேர்ந்தெடுத்து, சட்டசபையைக் கட்டியாண்டு ஏகாதிபத்தியத்தை வெட்டி வீழ்த்தி, உள்ளத்தில் உதித்த திட்டத்தை உருவாக்கஎண்ணினர் ஈமன் டி வாலரா. அதன்படி விடுதலை வேட்கையினர் அயர்லாந்தின் பார்லிமெண்டான மேல்சபைக்கு தேர்தலில் நின்றனர். சிலர் வென்றனர்.

வென்ற சிலரும், வெளியில் தங்கிவிட்டனர். ஏன் என்றால், முன் குறிப்பிட்டபடி, சட்டசபைப் பிரதிநிதிகள், ஆங்கில மன்னருக்கு விசுவாசமாய் இருப்பதாக பதவிப் பிரமாணம் செய்ய வேண்டியதாய் இருந்தது. அதற்குப் பின்னர்தான் வேதனையான — விசித்திரமான சட்டம் வந்தது. அப்பொழுது அதிகாரத்தில் இருந்த ஏகாதிபத்தியக் கங்காணி வில்லியம் காஸ்கிரேவ் விடுதலை வீரர்களைத் தேர்தலில் நிற்கவைத்தால்கூட ஆபத்து என்று கருதி, தேர்தலில்கூட நிற்க முடியாதபடி ஒரு சட்டம் செய்தான்; அந்தச் சட்டம்,

"தேர்தலுக்கு அபேட்சகராக நிற்கவிரும்புவோர் ஒவ்வொருவரும், முதலில் ராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்த பின்னர்தான் தேர்தலில் நிற்கவேண்டும்."

விடுதலை விரும்பிகளோ ஆங்கில மன்னருக்கு விசுவாசமாய் இருப்பதாகப் பிரமாணம் எடுக்க மறுப்பவர்கள். அதற்காக வேண்டியே, தேர்தலில் வென்றும் வெளியில் நின்றவர்கள். ஆகையால், இப்படிச் சட்டம் வந்தால் அவர்கள் தேர்தலில்கூட நிற்கமாட்டார்கள்; நாம் பெரும்பான்மை அங்கத்தினர்களைக் கொண்டு 'கைதாக்கும்' ஆட்சி நடத்தலாம், புரட்சி வீரர்கள் புரட்சி செய்தால், இருக்கவே இருக்கிறது அடக்குமுறை; ஆகையால் இனி விடுதலை வேட்கையினருக்கு, நாடு பெற வக்கு இல்லை; வகையில்லை — அங்கிங்கெனதபடி எங்கும் பரந்த ஏகாதிபத்தியம் அரசோச்சும் — என்று பகற்கனவு கண்டான், வில்லியம் காஸ்கிரேவ்! அவன் எண்ணத்தில் மண் விழுந்தது!

"விசுவாசப் பிரமாணம் எடுப்பது சட்டமாய், சம்பிரதாயமாய் இருக்கிற காரணத்தால், நாட்டின் நன்மையைக் கருதி, பிரமாணம் செய்வோம், தேர்தலில் திரும்பவும் நிற்போம், நமது இதய வேட்கையைப் போக்க இந்தப் பிரமாணம் ஒன்றும் பிரமாதமானதல்ல; இதனல் நமது நாடு மீட்கும் கொள்கை இடுகாடு புகுந்து விடாது!!—எனத் திட்டமிட்டான் ஈமன் டிவாலரா.

1927-ல் வந்த தேர்தலில் நின்றனர், சிலர் வென்றனர். அடுத்து 1932-ஆம் ஆண்டு வந்த தேர்தலில், ஈமன்டிவாலரா கோஷ்டியினர் பெருவாரியாகத் தேர்தலில் நின்று வென்றனர். ஆட்சி விடுதலை வேண்டிகள்கைக்குமாறியது! கனவு காட்சியாகியது! பட்ட பாட்டிற்கு சரியான, 'படி' இடைத்தது. அயர்லாந்தின் பார்லிமெண்டிலிருந்து, பின்பு பிறந்த சட்டங்கள் ஏகாதிபத்தியத்திற்கு வேட்டு வைப்பதாய் இருந்தன.

ஆங்கில மன்னனுக்குக் கட்டுப்பட்டதாக, விசுவாசப் பிரமாணம் செய்யவேண்டும் என்றிருந்த விதி ஒழித்துக் கட்டப்பட்டது! அயர்லாந்தின் சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்புக்கு மேலே, 'மகேஸ்வரன் குலாம்' பிரிட்டிஷ் பிரிவு கவுன்சிலுக்கு அப்பீல் கிடையாது என்று சட்டம் வந்தது! அயர்லாந்து விவசாயிகள், 'லேண்ட் அன்யூவிட்டீஸ்' என்று 50-இலட்சம் பவுன் பிரிட்டிசாருக்குக் கொட்டிவந்ததற்கு 'தலைமுழுக்குப்' போடப்பட்டது! பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரலுக்கு சீட்டுக் கிழிக்கப்பட்டது!!

அயர்லாந்தின் புதிய வாலாறு நாட்டின் நலனில் நாட்டம் கொண்டோரால், விடுதலை என்ற பேனுவால், காலம் எனும் புதிய மையால் நன்கு எழுதப்பட்டது. விடுதலை வேழங்கள் விருப்பம் போல் எல்லாம் சுமுகமாக முடிந்தன. "வென்றது வீணர் கோட்டம்; வீழ்ந்தது என்று அயர் மக்கள் ஆனந்தப் பள்ளுப் பாடினர். பதவிப் பிரமாணம் செய்வது இழுக்கு, அழுக்கு என்று, ஈமன் டி வாலரா கருதியிருப்பானேயாயின், அயர்லாந்தில் அடிமை அழுக்கும் அப்பிக்கொண்டு தானிருக்கும். டிவாலரா கோஷ்டியினரின் மேல் 'கையாலாகாதவர்கள்' என்ற இழுக்கும்படிய ஆரம்பித்திருக்கும்.

நம்மைப் பார்த்துக் கேள்விக் கணைகளை நீட்டுவோர் வரலாறு காட்டும் வழியைச் சிந்தித்துப் பார்க்கட்டும், நிந்தனையை விட்டு விட்டு!

"ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு"

—என்ற பாலர் பாடம், படித்த பாடம்தான். இதை ஈண்டு நினைவூட்டல் நன்று. சிறுசிறு மீன்களை தன் கால்களுக்கிடையேயும், பக்கத்திலேயும் ஓடுவதைப் பார்த்தும், அவைகளை ஒன்றும் செய்யாமல் — உறுமீன், பெரிய மீன் வருமளவும், ஆடாமல் அசையாமல், ஆனால் காரியத்தில்கருத்தும் கண்ணுமாய் இருக்குமாம் கொக்கு. இதைத்தான் 'வாடியிருக்குமாம் கொக்கு' கூறுகின்றது.

அதுபோல் நாமும், சிறுசிறு மீன்களை ஓடவிட்டு விட்டதைப் போல், பதவிப்பிரமாணம்போன்றவற்றைக் கவனிக்காமல்—பெரிய மீனுக்காகக் கவலைகொண்டிருக்கும் கொக்குபோல் சட்டசபைப் பெரும்பான்மையைக் கருத்தில் கொண்டு, ஆனால் கொக்கானது காரியத்தில் கருத்தும் கவனமுமாய் வாடியிருப்பதைப்போல நாமும் நமது கொள்கையில், செயலில் கருத்தாய் இருப்போம்.

வரலாறு காட்டும் வழியை மறந்துவிட்டு, இலக்கியம் இயம்பும் இலக்கணத்தை மறைத்துவிட்டு, நம்மைப் பார்த்து—"ஏக இந்திய ஐக்கியத்தைப் பூர்வ பீடிகையாகக் கொண்ட சட்டத்திற்கு விசுவாசம் உள்ளதாகவும் கட்டுப்பட்டதாகவும் பிரமாணம் எடுப்பது குற்றம், குறை" என்று கூறுகிறார்கள்.

மறுப்புக் கொடுக்காதவை அத்தனையும் உண்மை என்று கருதிக் கொண்டு நம்மை, மட்டம் தட்டுவதாக் நினைப்போருக்கு வரலாற்றையும், அது காட்டும் வழியையும் கருத்தில் வைக்குமாறு கவனப்படுத்துவதுடன், ஆங்கில ஆட்சியின்போது காங்கிரசு என்ன செய்தது, எப்படிச் சட்ட சபைப் பிரவேசம் நடைபெற்றது என்பதையும் எண்ணிப் பார்க்க விரும்புகிறோம்.

★

# நோயின் குறி!

—[கா. வேழவேந்தன்]—

கேள்விப்பட்டிருப்பீர்கள்! சரித்திரம் உங்களுக்குச்சொல்லி இருக்கும். வரலாறு வகையாக எடுத்துக்கூறி இருக்கும்! இந்த வையகத்தில், தான் மட்டும்வாழ, தகாதன செய்யும் மனிதர்கள் வாழ்ந்ததில்லை. எடுத்துக் காட்டுக்கு இட்லர், முசோலினி, நெப்போலியன் இப்படி எத்தனையோ சொல்லலாம்.

இதேபோல தன்நாடு மட்டும் வாழ வேண்டுமென்று பிறநாட்டைச் சுரண்டிய நாடுகள் நல்லவாழ்வு வாழ்ந்ததில்லை. சொந்தநாடு வாழ்வாங்கு வாழ, அயல் நாடுகளை வறுமைக்காட்டுக்குள் துரத்தும் நாடுகள் நிலைத்ததே இல்லை!

இங்கிலாந்து,தன் இனத்திற்காகவும் நாட்டிற்காகவும் இந்தியா போன்ற கடல்கடந்த நாடுகளையெல்லாம்சூழ்ச்சிக் கரத்தால் சுரண்டிச்சுரண்டி வாழ்ந்தது. ஆனால்இன்று அதேபோல வல்லரசாக வாழமுடிந்ததா?

சரித்திரத்தில், சற்று முந்திய ஏடுகளைப் புரட்டிப்பார்த்தால், ஐரோப்பாவில் பெரும் செல்வாக்குப் பெறுதற்கு, பிறநாடுகளை வெல்ல, படாதபாடுபட்ட பிரஷ்யநாட்டைக் காண்கிறோம். ஆனால் இப்போது அது எங்கே?

இதையெல்லாம் படிப்படியாகக் கண்டறிந்தும்—உலகத்தில் எங்கோ அல்ல, நமக்கு அண்டையிலே இருக்கும் ஒரு நாடு—தன் நிலையை உணர மறுக்கிறது. அது தன் போக்கிலேயே தான் செல்வேன் என்று பிடிவாதம் பிடிக்கிறது. ஆனால் அந்த நாட்டின் ஆதிக்கச் செயல்கள் அதற்கே அழிவைத் தரும் பயங்கரப் பள்ளமாக அமையுமோ என்று நல்லறிஞர்கள் கவலைப்படுகிறார்கள்.

அண்மையில் சென்னையில் இருந்து வரும் ஆங்கில இதழ் ஒன்றில் 'பெர்டினக்ஸ்' என்பவர் தம் கட்டுரையில் எழுதுகிறார்:

"வடநாடு, தென்னாடு பிரச்னை உண்மையும், உயிரும் உணர்ச்சியும் கொண்டு எழுந்துவிட்ட பிரச்னை. காங்கிரஸ் மேலிடம் இனியும் இதைக் காணக் கண்களைத் திறக்காவிட்டால் அது தென்னாட்டைப் பொறுத்தவரை மிகவும் வருந்த வேண்டிய நிலையை அடையும்" என்று குறிப்பிடுகிறார்.

நேற்றுவரை தி. மு. கழகம் சொல்லி வந்ததை இன்று பெர்டினக்ஸ் சொல்லுகிறார்!

ஆனால் இடிக்க இடிக்க இளைத்துப் போகும் தமிழ் நாட்டுக் காங்கிரசுக்காரர்கள் இன்னும் புரிந்துகொள்ளவில்லை. 'வடவரின் கூட்டாட்சி தென்னவரின் நலனுக்காக அல்ல; தன்னலத்திற்காகத்தான்' என்பதை எத்தனையோ பெர்டினக்சுகள் கூறினாலும் இவர்கள் செவிகளிலே ஏறாது; காரணம் இவர்கள் காதுகளில் பதவிப் பஞ்சு அடைக்கப் பட்டிருக்கிறது!

'வட நாட்டார் கடுகளவும் திராவிடத்தை மதிப்பதில்லை; அவர் கண்களுக்கு திராவிடம் துச்சமாகக் கருதப்படுகிறது' என்ற கருத்துக்கு இதோ ஓர் எடுத்துக் காட்டு!

அண்மையில் உத்தரப் பிரதேச 'காங்கிரஸ் கமிட்டியின் பழைய தலைவர் ஒருவர், 'இலங்கையில் ஏதோ இந்தியமக்கள் தொல்லைப்படுகிறார்கள் என்று சொல்கிறார்களே, அவர்களெல்லாம்யார்?'என்றுகேட்டாராம்

அங்கிருந்தவர்கள், 'அவர்களெல்லாம் தென்னாட்டைச் சேர்ந்த தமிழர்கள்!" என்று பதில் சொன்னார்களாம்.

உடனே அவர், "ஓ! அப்படியானால் நாம் ஏன் இதை எல்லாம் பெரிதாக்கிக்கொண்டு வீண் அவதிப்பட வேண்டும்; அவர்களே தமக்குள் அடிபட்டு ஒரு வழிக்கு வந்துவிடுவார்கள்" என்று சிரித்துக் கொண்டே பதில் சொன்னாராம் அந்தத்தலைவர்!

இந்தப் பேச்சிலே ஆணவத்தின் நெடி வீசுவதை அறிகிறோம்! மூர்க்கத்தனம் மண்டிக் கிடப்பதை உணர்கிறோம்! சுயநலத்தின் மொத்த உருவை இந்த மூலவர்களின் சொற்களிலே காண்கிறோம்!

எனவேதான் நேர்மையின் பெயரால், நீதியின் பெயரால் அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறோம்.

'டில்லி மூலவர்களே! கவனம் வையுங்கள். காலம் இப்படியே போய்க் கொண்டிருக்காது; நிச்சயம் திரும்பும்! மொழித் துறையில் தாங்கொணாக் கொடுமை இழைக்கிறீர்கள்! தொழில் துறையில் துணிந்து துரோகம் செய்கிறீர்கள்! மக்களை மக்களாக மதிக்க மறுக்கிறீர்கள்! சனநாயகம் கூறும் எதிர்க் கட்சிகளை முழுக்க முழுக்க வெறுக்கிறீர்கள்! இவையெல்லாம் சர்வாதிகாரிகளிடம் காணப்பட்ட திருக்குணங்கள்! தவறுகளை உணர மறுக்கும் போக்கினரே! மறவாதீர்கள்! குஷ்டரோகிக்குக் குஷ்டம் வருமுன் தோன்றும் கொப்புளங்களின் வலி தெரிவதில்லை; ஆனால் அதுதானே அவனுடைய முடிவுக்கு அறிகுறி! ★





# மழலை

—[அன்பு]—

"உங்களுக்கென்னகுறை? செல்வம் இல்லையே என்ற கவலையா; சிறப்பு இல்லையே என்று ஏக்கமா? உங்கள் உதட்டசைவைக் காத்து நின்று உற்றபணி செய்ய ஓராயிரவர் எதிர்பார்த்து நிற்கின்றனர்." என்றெல்லாம் கேட்கலாம். உண்மைதான், இவையெல்லாம் நீங்கள் என்னிடத்தே காணும் வெளி நிறைகள். ஆனால் என்உள்ளத்தே இருக்கும் ஒரு குறை—ஒரே குறை—அதுவும் பெருங்குறை, என்னை 'அப்பா' என்று அன்பு ததும்ப அழைக்க எனக்குப் பின் என் பெயரைச் சொல்ல, என் செல்வங்களையெல்லாம் கட்டியாள ஒரு மழலைச் செல்வம் இல்லையே என்ற பெருங்குறையை நீங்கள் உணரவில்லையா?" என்றுபிள்ளைப்பேறு கிடைக்காமல் வருந்தி, சாகாமல் சாகும் எத்தனையோ செல்வச் சீமான்களை நாம் அன்றாட வாழ்வில் காண்கிறோம்.

"இனி, நமக்கும் அவனுக்கும் உறவுஅவ்வளவுதான். நான் இனி அவன் வீட்டு வாசலை மிதிக்கப் போவதில்லை" என்று மகனிடம் சபதம் பேசி வந்த எத்தனையோ தாய் தந்தையர்களை "எனக்கு அவன்தான் ஆகாது என்றால் என் பேரன்கூட ஆகாதா என்ன? சிறு குழந்தை அவன், எங்களை என்னசெய்தான்? எங்கள் பேரனை நாங்கள் எடுத்துக் கொஞ்சாமல் வேறு யார் எடுத்துக் கொஞ்ச முடியும்?" என்றுஅதேமகனுக்குப் பிறந்த ஒரு சிறு குழந்தை செய்து விடுகிறது. அவர்கள் செய்த சபதமெல்லாம் அந்தப் பிள்ளைக்கனியமுதின் ஒரே ஒரு மொட்டவிழாப் புன்னகையின் முன் தோற்றோடுகிறது!

"இனி எனக்கும் அவளுக்கும் தொந்தம்அவ்வளவுதான்" என்று இல்லறவாழ்வின் நடுவில் மனம் கசந்திருக்கும் தம்பதிகளை, தான் வந்து தோன்றியவுடன் ஒன்று கூட்டிவைத்து வேடிக்கை பார்க்கிறான் ஒரு மழலைச் செல்வன்.

அடுத்த வேளை உணவுக்கு வழி எங்கே தேடுவது என்று அன்றாடம் செத்துப் பிழைத்துக்கொண்டிருக்கும் ஏழைகூட, தனக்குக் குழந்தையே வேண்டாமென்றோ இருக்கிற குழந்தைகள் தொலைந்தால் போதும் என்றோ தவறியும் நினைப்பதில்லை;தான் இறந்தாவது குழந்தையைத்தான் காப்பாற்ற முனைவான்.

இவையெல்லாம் நாம் அன்றாட வாழ்வில் காணும் நடப்புகள். இல்லற வாழ்க்கையின் பயனே நன்மக்களை ஈன்றெடுப்பதுதான்; மழலைச் செல்வத்தைப் போன்ற பெருஞ் செல்வம் இவ்வுலகில் கிடையாது என்பதனாலேயே குழந்தையைச்செல்வமாக—செல்வத்தினும் மேலாக விரும்பி மதிக்கின்றனர். வாழ்க்கையில் எல்லாவித நிறைகள் இருந்தாலும் குழந்தையில்லையே என்ற ஒரே குறை அத்தனை நிறைகளையும் போக்கிவிடும். இங்ஙனம் மழலைச் செல்வத்தின் சிறப்பினை விரிக்கின் நீளும், சுருக்கின் மிஞ்சும்.

ஒரு குழந்தை குறு குறு நடந்து சென்று தன் சிறிய கையை நீட்டி உண்கலத்திலிருக்கும்நெய்ச்சோற்றிலே தன் கையை இட்டு, பிசைந்து, பின் அக்கையாலேயே தன் பெற்றோரை ஆவலுடன் கட்டிக்கொண்டு, வாயினால் கவ்வியும், கையினால் துழாவியும் சோற்றுப் பற்றுகளை மேலெல்லாம் சிதறிக் கொண்டும் விளையாடுகிறது. இச் செயல்களை எப் பெற்றோராவது தீச்செயல்கள் எனக் கொள்வரோ? அறவே கொள்ளார். மாறாக, மழலையின் இச் செயல்கள் பெற்றோரை அளவிலா இன்பத்திலாழ்த்தி மகிழச் செய்யும். இவ்வாறு பாண்டியன் அறிவுடை நம்பி என்ற புலவர் புறநாற்றுப் பாடலொன்றில் கூறுகிறார்.

படைப்புப்பல படைத்துப் பலரோடு
உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும்
இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே.

குழந்தையின் உள்ளம் தூய்மை பொருந்தியது; துன்பம் வந்தபோது அழும்; இன்பம் வந்தபோது இன்முகம் காட்டும்! இந்த இரண்டு செய்கைகளைத் தவிர வேறு எந்த எண்ணங்களும் கொண்டிராத அதன் மனத் தூய்மையைக் காலை இளங்காற்றிற்கு ஒப்பிடலாம், களங்கமிலா முழுமதிக்கு உவமை கூறலாம்; களைதோன்றா பசும் நாற்றோடு வைத்து எண்ணலாம். கள்ளம் கபடமறியாத அப்பிஞ்சு மனம் படைத்த அன்றலர்ந்த மலர் போன்ற ஒளிமுகத்தோடு, உமிழ்நீர் பூவிதழ் போன்ற உதடுகளின்றும் வழிய தத்தித்தவ்வி ஊர்ந்து வரும் காட்சியினைக் கண்டு மனம் பறிகொடுக்காதார் யார்?

பதட்ட குணம் படைத்தோரும் கோப உள்ளம் கொண்டோரும், அஞ்சா நெஞ்சு படைத்த வீரரும்; அறிஞரும் கலைஞரும் ஆகிய அத்தனை பேரும் மழலையின் முன் மனம் ஒன்றிவிடுகின்றனர். பல்வேறுபட்ட குணம் படைத்த மனிதர்களையும் தன்பால் ஈர்க்கும் சக்தி குழந்தை ஒன்றுக்கே உரியது!

கனல் தெறிக்கும் முகம் கொண்டோரும் பிள்ளைக் கனியமுதின் முன் கனிவு முகம் கொண்டோராக மாறத்தான் வேண்டும். இதற்குச் சான்றாக புறநானூற்றில் ஒரு நிகழ்ச்சி உள்ளது. அதியமான் நெடுமான் அஞ்சி தன் மகன் பொருட்டெழினியைக் காணச் செல்கிறான். எக்கோலத்தோடு? கையிலே வேல், கால்களிலே வீரக்கழல்; உடலிலே வேர்ப்பு, கழுத்திலே ஈரம்புலராத புண், இக்கோலத்தோடு இருக்கும் அதியமானைப் பார்த்து ஒளவையார் கேட்கிறார் "புலியுடன் சண்டையிட்ட யானை, சண்டை முடிந்தும் கோபம் அடங்காததுபோலச் சிவந்த கண்களுடன் தோன்றுகிறாய். உன்னை இவ்வாறு கோபத்துக்குள்ளாக்கியவர்கள் பிழைத்திரார். இப்புதல்வனைப் பார்த்தும் உன் கண்ணின் கோபம் நீங்கவில்லையே? (நீங்க வேண்டும்) தன் புதல்வனைப் பார்த்த பின்னராவது சினம் தணிய வேண்டும். அந்தச் சக்தி குழந்தைக்கு உண்டு என்ற கருத்துப்படக் கூறுகிறார்

செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பா னாவே

நரைமுது கிழவர்களையும் ஒரு சில நிமிடங்கள் தன்னோடொத்த வயதின

ராகச் செய்துவிடும் அருஞ் சக்தி குழந்தைக்கு உண்டு. குழந்தை தன்னைப்போலவே அவர்களும் தவழ்ந்தும் ஊர்ந்தும் நடக்க வேண்டும் என்று விரும்பினால், அந்த ஒரு விருப்பத்திற்காக அவர்கள் தங்களையும் குழந்தைகளாக மாற்றிக்கொள்ளத் தயங்கார்.

மழலைசிரிக்கிறது. எப்படிச்சிரிக்கிறது? கார்முகில் திரண்டிருக்கும் வானத்தில் மின்னல் பளிச்சிடுவதைப்போல இருக்கிறதாம் குழந்தையின் சிரிப்பு—கூறுகிறார் புரட்சிக் கவிஞர்

மெல்லென எரிந்த மின்னல் அந்த
செல்வக் குழந்தையின் சிரிப்பு!

குழந்தையொன்றின் ஒரே ஒரு சிரிப்பு பெற்றோர்களின் எத்தனையோ கவலைகளைப் போக்கும். குழந்தையொன்று தன் உள்ளத்தைத் திறந்து மழலையொலியுடன் சிரிக்கிறது என்று வைத்துக்கொள்வோம். உடன் என்ன நிகழ்கிறது? கூடியிருந்த அத்தனை பேரும் மனமகிழ்வோடு சிரிக்கின்றனர்! காரணம்? யாருக்குமே தெரியாது! குழந்தை சிரித்தது; குழுமியிருந்தோர் சிரித்தனர்! அதுவே மழலையின் சக்தி! மேலும் அவர் கவிதை உள்ளத்தோடு இந்நிகழ்ச்சியை மிக அழகு படச் சித்தரிக்கின்றார்

பிள்ளை சிரிக்கையில்
சிரித்தது வையம்!
சிரித்தது வானமே!

பிள்ளையின் சிரிப்பில் மட்டும் உலகம் இவ்வாறு பங்கேற்கவில்லை. அது துன்பமுற்றால் பெற்றோரும் மற்றோரும் அதைவிடப் பன்மடங்கு துயருற்றவராகின்றனர். கண்ணினைப்பாவையெனத்தன கண்மணியை வளர்த்து வந்த தாய் அதன் இன்னல் கண்டு எவ்வளவு தூரம் மனம் வெதும்புகிறாள் என்பதைப் பெருங்கவி பாரதியார் தன்னைத் தாய்மைத் தானத்தில் அமைத்துக்கொண்டு பாடியிருக்கும் ஒரு பாடல், நன்கு விளக்குவதாக அமைந்துள்ளது.

சற்றுன் முகஞ் சிவந்தால்—மனது
சஞ்சல மாகுதடீ!
நெற்றி சுருங்கக் கண்டால்—எனக்கு
நெஞ்சம் பதைக்கு தடீ!
உன் கண்ணில் நீர்வழிந்தால்—என்
நெஞ்சில்
உதிரங் கொட்டு தடீ!

குடிப் பழக்கம் தராத உடல் கிளர்ச்சியை, கவிதை யின்பம் தராத உள்ள உணர்ச்சியை ஒரு மழலைச் செல்வம் தரும்! அத்தகைய அரும் பெரும் திறன் அதற்கு உண்டு. குழந்தையைக் கண்டவுடன் அதனை யாரும் அன்புடன் தூக்கி உச்சி மோந்து, மார்புறத் தழுவி, அது அழ மட்டும் கன்னத்தில் முத்தமிடுவர்! அப்போது அவர்கள் அடையும் மகிழ்வுணர்ச்சியை யாரே விவரிக்க முடியும்! பாரதியார் அதை நன்கு விளக்கியிருக்கிறார். அவர் பாடியிருப்பதை நோக்குங்கால், குழந்தை யொன்றினைத் தன் முன் வைத்து விளையாடவிட்டு அதன் தன்னிகரில்லாத் தனிப் பெருஞ் சிறப்பினைக் கவிதையாகப் பாடியிருப்பாரோ என்று எண்ணு மளவுக்கு, சொல்லால் விவரித்து விளக்க முடியாத அவ்வுணர்ச்சியை கவிதையாகவே பாடியிருக்கிறார் :

ஓடி வருகையிலே—கண்ணம்மா
உள்ளங் குளிரு தடீ!
ஆடித் திரிதல் கண்டால்—உன்னைப்
போய்
ஆவி தழுவு தடீ!
உச்சி தனை முகந்தால்—கருவம்
ஓங்கி வளரு தடீ!
மெச்சி யுனை யூரார்—புகழ்ந்தால்
மேனி சிலிர்க்கு தடீ!
கன்னத்தில் முத்தமிட்டால்-உள்ளந்தான்
கள்வெறி கொள்ளு தடீ!
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா
உன்மத்த மாகு தடீ!

இத்தகைய சிறப்புக்களை உடைய குழந்தையின் மழலை மொழிச் சிறப்பை சொல்லிலடக்க முடியாது. தனக்குப் பிள்ளைப் பேறு கிடைக்காதோர், பிறர் குழந்தைகள் மழலை மொழியில் பேசுதலைக் கேட்கும்போதுதான் நெஞ்சம் நெக்குருகித் தங்களுக்கும் அவ்வாறு பேசும் குழந்தையில்லையே என்று வருந்துவர் என்றால், பின் மழலை மொழியின் உயர்வை விவரிக்கத் தேவையில்லை. குழந்தை செல்வமாக மதிக்கப்படுவதே அதன் மழலை மொழியின் அருமைக்காகத்தான். அப்படியென்ன அம்மழலை மொழி, கேட்டார் பிணிக்கும், கேளாதவரும் கேட்க விரும்பும் வகையில் பேசும் நா வீரர்களின் சொல்லலங்காரத்தைவிடச் சிறப்புடைத்தா என்றால் இல்லை; இருந்தும் அம் மழலை மொழியில்தான் சிறப்பு - இனிமை - அழகு இருக்கிறதென உலகமே ஒப்புகிறது. மழலைச் சொற்களைக் கேளாதோரே, யாழ் இனிது குழல் இனிது என்பர். யாழிசை அளிக்காத இன்பத்தை குழலிசை தராத இனிமையை மழலை மொழி தரும்! அதைவிட இனிமை, இதைவிடச் சிறப்பு என்று இப்படி உவமை கூறி மழலை மொழியின் உயர்வை விளக்கலாமே தவிர, அதன் சிறப்பை மட்டும் தனியே விவரிப்பது என்பது இயலாத செயல். அத்துணையளவு பெருமையுடையது மழலை மொழி.

மேற்கூறிய அனைத்தையும் வள்ளுவர் இரண்டே வரிகளில் கூறிவிட்டார். குழந்தையை எல்லோரும் யாவற்றினும் மேலாக வைத்துக் கருதுவதற்குக் காரணம், ஒன்று, நாம் அதன் மெய் தீண்டலினின்றும் அடையும் இன்பம்; மற்றொன்று அதன் மழலை மொழி நமக்குத் தரும் இனிமை. இந்த இன்பம், இனிமை ஆகிய இரண்டனுள்தான் மழலையின் விவரிக்க முடியாச் சிறப்புகள் அனைத்தும் அடங்கிக் கிடக்கின்றன.

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்று அவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு

இவ்வாறு குழந்தையானது அரும் பெரும் சிறப்புக்களைப் பெற்றிருத்தலினாலேயே அதனைச் செல்வங்களுக்கெல்லாம் செல்வம் என மக்கள் கருதுகின்றனர். எச்செல்வம் இருப்பினும் இல்லாவிடினும் மழலைச் செல்வம் ஒன்றிருப்பின் அதுவே போதும் எனறு மனநிறைவு கொள்ளுகின்றனர். அறிஞர்கள் தங்கள் குழந்தைகளையே தம்முடைய பொருள் என்று கூறுவர் என வள்ளுவர் கூறுகிறார்.

இவ்வாறெல்லாம் ஏத்திப் புகழப்படும் மழலையைப் பெறும் பேறு எங்களுக்குத்தானே எனத் தாய்க்குலம் பெருமைப் படுகிறது! ஏனெனில் உலகில் ஆண் பெண் இரு பாலாருள் உயர்வாகக்கருதப் படும் பெண்குலத்துக்கு 'தாய்மை' என்னும் பெறற்கரிய பெறும் பேற்றை அளிப்பது மழலைதானே!

★



(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பிடித்துள்ள இனவெறி, வறுமை, போட்டி, சண்டை போன்ற கொடுமைகள், களைந்தெறியப்படவேண்டும். அந்தக் களை எடுக்கப்படுவதற்குக் கன்னியாகுமரியில் ஆரம்பித்து நியூயார்க் வரையிலே 'சந்தா' சேர்க்கப் போகிறேன், என்பதால் இயலாது!!

எந்தெந்த நாடுகள் அமுக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்நியர் ஆதிக்கத்தில் இருப்பதாகக் கருதுகின்றனவோ, அவைகளுக்கு விடுதலை கிடைக்கும்படி செய்யவேண்டும்.

விடுதலைபெற்ற நாட்டின் மொழியும், வாழ்க்கை வழியும் எப்படியெப்படிச் சிறக்கவேண்டுமோ அதற்கு உதவிகள் செய்து, அந்த நாட்டிலே வறுமையில்லை — சாதிச்சண்டை இல்லை — இல்லான் இருப்பவன் பேதம் இல்லை — என்கிற மனித நெறி மலரும்படி செய்யவேண்டும்.

அப்படிமலர்ந்த நாடுகள் அனைத்தும் இன்றுள்ள ஐ. நா. சபை போல் ஒரு சபையில் கூடித் தங்கள் பிரச்னைகளை வாய் விட்டுப் பேசி, உலகை உய்விக்க முடியுமே ஒழிய, அதைவிட்டு ஒரே உலக ஆட்சி என்பதும், ஒருபெரிய உபகண்டத்தையே உணவு, உடை பழக்கவழக்கங்களால் ஒன்றுக்கிவிட வேண்டும் என்பதும், அரிப்பு எடுக்கும்போது சொரிந்து கொள்வதைப் போலாகுமே ஒழிய, வியாதியைக் குணப்படுத்தும் வைத்தியமாக முடியாது.

உலக நாடுகள் அனைத்தும் கூடிப்பேசி, இன்பவாழ்வு நடாத்த ஒரு ஐ. நா. சபை இருப்பதுபோல், இந்த துணைக் கண்டத்தில் பலவித உணவு — உடை — மொழி — பழக்க வழக்கங்களுடன் வாழும் மக்களுக்கான, ஒரு சிறு ஐ. நா. சபையை வேண்டுமானால், டில்லியிலேகூட வைத்துக் கொள்ளலாம். அந்தச்சபையில், ஒவ்வொரு பகுதியினரின் சுக துக்க வாழ்வுபற்றிப் பரிமாறிக்கொள்ளலாம்.

முதல் தி.மு.க. மாநில மாநாட்டிலேயே, இதனை நாம் கூறியுள்ளோம்! அப்படிப்பட்ட சபைக்கு, அ.இ.ச. (அகில இந்திய நாடுகள் சபை) என்கிற பெயரைக்கூட வைத்துக்கொள்ளலாம்!!

வளரும் உலகில், இதுபோல அகத்தை வெல்லும் நற்பணிகள்தான், அன்பையும் ஐக்கியத்தையும் வளரச்செய்ய முடியுமே ஒழிய ஆதிக்க ஆசையால், பலன் பெறமுடியாது.

✿

## ஊரார் உரையாடல்

"என்ன ஓய்! என்ன? ஆளையே காணோம்...ஆத்திலேகூட வந்து விசாரிச்சேன்......உம்மோட அகமுடையா சொன்னா, எங்கேயோ பெங்களூர் போகப்போறீர், அதுக்காக வெளி வேலைகளைப் பார்க்கப் போயிருக்கிறானு.........என்ன ஓய் அப்படி பெங்களூரிலே!"

"பெங்களூரிலே...ஒரு..மாநாடு"

"மஹாநாடா? என்ன மஹாநாடு"

"மாநாடு, மஹாநாடு அல்ல..."

"என்னஓய்! உமது பேச்சுக்கூட மாறிப் போயிருக்கு...நம்ம ஆத்துப் பாஷையைக் காணோம்...... என்ன விசேஷம் இந்தத்திமுகழக் கூட்டத்துக்கு அடிக்கடி போயிட்டு வர்றதா கேள்விப் பட்டேன்...அந்த வாடையோ?"

"ஆமாம்!"

"ஆமாமா? என்ன ஓய் இது! என்ன இது!"

"ஏனய்யா ஆச்சரியமடைகிறீர்! சட்டசபைக்குக்கூடப் போயிருந்தேன்—வெளியிலும் சரி, உள்ளேயும் சரி அவர்கள் பேச்சும் செயலும், எனக்குப் பிடித்திருக்கிறது..."

"ஆகா! அதனாலே, நடை உடைப்பேச்சைக்கூட மாத்திண்டுறதென்ற முடிவுக்கு வந்துட்டீர் போலேயிருக்கு..."

"ஏன்? நமது ஏடுகள் என்று கருதப்படும், மித்திரன், கல்கி, ஆனந்தவிகடன் போன்றவைகளில்கூட தமிழ் மணக்க ஆரம்பித்திருக்கிறதே கவனிக்கவில்லையோ..."

"ஆமாம், ஓய்! 'ஜெமினி' படம் ஒன்று இப்ப வந்திருக்கே... அதுவேகூட அப்படித்தான் தோணிச்சு..."

"காலம் மாற்றுகிறது! நானும், மாறிவிட்டேன். இதிலென்ன ஆச்சரியம் உமக்கு..."

"இதிலே! இப்படித் திடுதிப்புன்னு எப்படி உம்மாலே முடிஞ்சுதுண்ணு கேட்கிறேன்..."

"நீரும், தி.மு.க. கூட்டங்கள் மாநாடுகளுக்கெல்லாம் போய் வாரும். தமிழ், தன்னாலே வரும்..."

"அப்ப, நேக்கும், பெங்களூருக்கு ஒரு டிக்கட்...?"

"பெங்களூருக்கென்ன மே 10,11 தேதிகளில் நடக்கும் திருவாரூர் மாநாட்டுக்கு வேண்டுமானாலும் அழைத்துப் போகிறேன்..."

"திருவாரூரிலேயா! நம்ம சொந்த ஊர் ஆச்சேங்காணும், அது...அங்கேகூடவா, மாநாடு போடுறா..."

"ஆமாம்! தஞ்சை மாவட்ட மாநாடு. மதியழகன் தலைமையில் ப. உ. சண்முகம், எம். எல். ஏ., திறந்து வைக்கிறார்..."

"பெங்களூர் மாநாட்டில்?"

"சத்தியவாணிமுத்து எம். எல். ஏ., தலைமையில், நடிகமணி டி. வி. நாராயணசாமி திறந்து வைக்கிறார்..."

"ஆத்துக்குப் போய்...மன்னிச்சுக்கும் ஓய்!.....வீட்டுக்குப்போய் சொல்லிண்டு 'ரெடி'யாயிருக்கேன்..."

* * *

"என்ன நிருபர் சார்! இன்னைக்கு சேதி பார்த்தீங்களா...?"

"என்ன சேதிங்க!"

"மைசூர், ஏமாற்றிடும் போலிருக்கே..."

"என்ன ரேசைப் பற்றிச் சொல்றீங்களா...?"

"இல்லே, சாமி! மைசூர், சர்க்காரைப் பற்றிச் சொல்றேன்..."

"என்ன! மைசூர் சர்க்காருக்கென்ன? மந்திரி சபைமீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவதாயிருந்தது, நேரு தலையிட்டால், தற்சமயம் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறதாம்..."

"நான் அதைச் சொல்லலே! பாலாறுக்குத் தண்ணீர் விடணும்னு, மைசூரைக்கேட்கணும்னு சட்டசபையிலே தி. மு. க. காரங்க சொன்னாங்களே..."

"ஆமாம்! அதுபோல, சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்காங்களா? மைசூர் சர்க்கார் சம்மதிச்சுட்டுதா !!"

"நான் பத்திரிகையைப் படிச்சிட்டு, கேட்கிறேன் - நிருபராயிருக்கிற நீங்க, என்னைக்கேள்வி கேட்கிறீங்களே..."

"ஒய்வு ஏதுங்க, பத்திரிகையைப் படிக்க! காலையிலேருந்து எந்த மந்திரி எங்கே பேசுறார், எங்கே கவர்னர் பேசுறாருன்னு ஓடி, பேசறதை எழுதிக் கொண்டு போய் கொடுத்துட்டு, விட்டுக்கு வந்தா ...இங்கே ஆயிரம் தொல்லை காத்துக்கிட்டு இருக்கு. சரி! விபரத்தைச் சொல்லுங்க...மைசூர் சர்க்கார், நம்ப காமராசருக்கு ரொம்ப வேண்டியவங்க! சம்மதம்னு சொல்லிட்டாங்களா !!"

"காரியத்தை சாதிக்கணும்னு முயற்சியாயிருந்தா பாலாற்றிலே தண்ணியா வராது? அதைப்பற்றி நான் சொல்லலே! இப்ப, காவிரியிலே வருதுல்லே தண்ணீர், அதைக் குறைக்கவும் மைசூர் சர்க்கார் யோசித்துக் கொண்டு இருக்கிறதாம்..."

"என்ன? காவிரியும் பாலாறு ஆகப் போகுதா!! என்ன சார், இது ...... நான் இப்பவே போறேன்...".

"எங்கே?"

"போய் நம்ம மந்திரிகளைப் பார்க்கிறேன்..."

"தி. மு. க.காரங்களுக்குப் பதில் சொல்றதுக்காக, ஊரு ஊராய்ப் பேசறது பெரிய வேலையாயிருக்கு அவுங்களுக்கு...எதுக்கும் 'போன்' செஞ்சு விசாரிச்சுக்கிட்டுப் போங்க..."

* * *

"கருப்பையா!"

"என்ன,மண்டலக்கமிட்டி அண்ணாச்சி?"

"குரலிலே என்னப்பா முறுக்கு இல்லே! சுரம் குறைஞ்சு பேசறீயே!!"

"வேறே என்ன அண்ணாச்சி? அவுருகிட்டே போனேன்...கடிக்கிருப்பலே பாய்ருரு..."

"யாரு?"

"அதான்! எம். எல். ஏ. ஆக்கிறதுக்காக, காங்கிரசிலே சேர்த்தோமே... 'மாஜி' கள்ளுக்கடை.... அவுருதான்..."

"ஏன்? உன்கிட்டே பாய்ருரு!"

"எல்லாம் நம்ம தலைவருங்களாலே வர்றதுதான்..."

"என்னப்பா, நீயே, நம்ம தலைவருங்க மேலே கோவிச்சுக்க ஆரம்பிச்சிட்டே...."

"பின்னே என்ன? எஸ். கே. பட்டீலு இல்லே..."

"ஆமாம், இருக்காரு! முந்தி பம்பாய் மாகாண காங்கிரஸ் தலைவராயிருந்தாரு... இப்ப டில்லி மந்திரியாயிருக்காரு..."

"அவரு பேசியிருக்காராம்..."

"எதைப்பற்றி?"

"அதைப்பற்றி அண்ணாச்சி, இப்ப நம்ம தலைவருங்க பேசுறாங்க! தினம்தினம், நேரு முதற்கொண்டு ஒவ்வொருவரும் 'காங்கிரசு கெட்டுப் போச்சு—சீர்திருத்தம் செய்யணும்னு' சொல்றாங்களே..."

"ஆமாம்..."

"அதைப்பற்றிப் பட்டேலும் பேசியிருக்காரு... சுயநலக்காரங்க புதுசா காங்கிரசிலே புகுந்திருக்காங்களாம். அவுங்க, காங்கிரசை, தங்களுக்கு உபயோகப்படுத்திக்கப்பார்க்கிறாங்களாம்... இதைப் பத்திரிகையிலே படிச்சிட்டு, ஏனய்யா எங்களைப்பத்தித்தானே இப்படியெல்லாம் உங்க தலைவருங்க பேசுறாங்க, நாங்க ளய்யா காங்கிரசிலே வந்து சேர்ந்தோம், உங்க சுயநலத்துக்காக—பணம் வைச்சிருக்கிற நான் நின்னுத்தான் ஜெயிக்க முடியும்னு—என் காலிலே நீங்கதானே விழுந்தீங்க... அப்படி இப்படியின்னு கோபிச்சுக்கிருரு..."

"அவர் கோபிக்கிறது என்ன கருப்பு! எனக்கே இப்ப கோபம் வருது.........புதுசா சேர்ந்தவங்கன்னு, நானும் புதுசா சேர்ந்தவன்தானே—சேச்சே! இதெல்லாம் நல்லாலல்லே!! என்னமோ, இன்கம்டாக்ஸ் கேசுக்காக உன்கிட்டே வந்தேன்... நீ சொன்னேன்னு, இந்த மண்டலம், கமிட்டிகெல்லாம் தலையாட்டினேன்... நீ வராமலா நாங்க வந்து பூந்துகிட்டோம்..."

"அண்ணாச்சி அண்ணாச்சி! நீங்களும் கோவிச்சுக்காதீங்க...... நில்லுங்க... அடடே! போயிட்டாரே!! செய்றதையும் செஞ்சுபிட்டு, இந்தத் தலைவருங்க, நம்மைத் திண்டாடவிட்டுடுறாங்களே...அடமகாத்மா!!" ★





2-ம் பக்கத் தொடர்ச்சி

யும் அவனுல் அறிய முடியவில்லை. ஆனுல், அவனது இதயத்துள் குடிகொண்ட உணர்வு மட்டும் அழியாமல் அடங்கிக்கிடந்தது. அப்படி அடங்கிக்கிடந்த உணர்ச்சி இன்று மணம் மண்டிக் கிடக்கும் மலர் மொட்டைக்கண்ட போது மேலோங்கியது. அவன் எண்ணுகிருன்:

"இந்த அழகிய மொட்டினுள் மணம் அடங்கிக்கிடக்கிறது. அதைப்போல்தான் அன்று அவள் என்னைப் பார்த்துப் புன்னகை பூத்தாளே, அந்த நகையினுள்ளும் ஒருவிதக்குறிப்பு—காதற்குறிப்பு—இருக்க வேண்டும்."

இவ்வாறு இயற்கைக் காட்சியைக் கண்டு இதயத்திலே உணர்ச்சி குவியும் காட்சியைத் திருவள்ளுவர்,

முகைமொக்குள் உள்ளதுநாற்றம்போல்பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு

என்று ஒன்றே முக்கால் அடிகளிலே அடக்கிக் காட்டுகிருர்.

இனி, இயற்கைக் காட்சிகளைக் கொண்டு இரண்டு இதயங்களைப் படம் பிடிக்கும் ஒரு சங்கப் புலவர் பாடலையும் பார்ப்போம்.

நல்ல மையிருட்டு; ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாத இருட்டு. அந்த இருள் பெய்யும் மழை பெருமழையாக இருப்பதால் வானமே தெரியவில்லை. மழை நீர் மண்ணில் விழ்ந்து வெள்ளம்போல் ஓடுவதால் நிலமே தெரியவில்லை. இவ்வாறு இருள் படர்ந்த இரவிலே வானமே தெரியாதவாறு மழை பெய்து நிலமே தெரியாதவாறு நீர் நிறைந்து ஓடுகின்ற வேளையிலே, பலரும் உறங்குகின்றனர். ஆனல் இருவர் மட்டும் உறங்கவில்லை. அவர்களது இதயங்களிலே உணர்ச்சி அலைகள் எழுந்து எழுந்து அவர்களை வருத்துகிறது.

அன்றிரவுதான் அவனை அவள் குறியிடத்திலே காணுமாறு கூறியிருந்தாள். அவனும் அவளைக் காணச் செல்ல இருந்தான். அதற்குள் இயற்கை அவர்களது எண்ணத்திற்கு எதிரியாக வந்துவிட்டது; பெருந் தடையாக வந்து நின்றது. இருந்தபோதிலும் தலைவன், அஞ்சவில்லை. மையிருட்டையும் பெரு மழையையும் பொருட்படுத்தாது, தலைவி வாழும் ஊர் நோக்கி நடக்கத் தொடங்கினன். ஆனல், வழியோ தெரியவில்லை. இருட்டும் மழையும் அவனை இடர்ப்படுத்தின. இருந்தும் அவன் தளரவில்லை. இரவிலே மலர்கின்ற வேங்கை மலர்களின் மணம் தொலைவிலிருந்து வந்துகொண்டிருப்பதை நுகர்ந்து அறிந்தான். அந்த வேங்கை மலர்கள் தலைவியின் சிற்றூரில்தான் மலர்ந்திருக்கிறது என்பதையும், அங்கிருந்துதான் மணம் வந்துகொண்டிருக்கிறது என்பதையும் உணர்ந்தான். வழி தெரியாது இடர்ப்பட்டுக்கொண்டிருந்த தலைவன், அந்த மணம் வந்துகொண்டிருந்த திக்கு நோக்கி நடந்து தலைவி வாழும் சிற்றூரை அடைந்தான்; தலைவியிடம் வந்து சேர்ந்தான்.

அந்தப் பெருமழையிலும் மையிருட்டிலும் தலைவன் தன்னைக் காண வருவானு வாராதொழிவானு என எண்ணிக் கலங்கிக்கொண்டிருக்கும் தலைவி முன் தலைவன் தெப்பமாக நனைந்தவாறு நின்ருன். அவனைக் கண்டவுடன் அவளுக்கு ஒரேமகிழ்ச்சி. மகிழ்ச்சியுடன் வெளி உலகை நோக்கு கிருள். அந்த மகிழ்ச்சியைப் போக்கிவிடுகிறது அவள் அங்கே கண்ட இயற்கைக் காட்சி. மையிருட்டு. மழையோ கொட்டுகிறது. வானமோ தெரியவில்லை. நீர் பெருகி ஓடுவதால் நிலமும் தெரியவில்லை. இயற்கை விளைவித்துள்ள இத்துணைக் கொடுமைகளையும் தாங்கிக்கொண்டு தன்னைக் காண வந்திருக்கும் தலைவனின் தூய காதலை எண்ணி வியக்கிருள்; அவன் உற்ற துன்பத்திற்காக வருந்தவும் செய்கிருள். வருத்தத்துடன் அவனிடம் சொல்லுகிருள்.

"அன்பரே! பலரும் உறங்குகின்ற மையிருட்டுடன் கூடிய இந்த நள்ளிரவிலே வானமும் நிலமும் தெரியாதவாறு மழைபெய்து கொண்டிருக்கும்போது நீங்கள் இங்கு எப்படிவந்தீர்கள்? வேங்கை மலர்களின் மணம் கமழும் எம்சிறுகுடியை எப்படி அறிந்து வந்தீர்கள்? உங்களை இத்துன்பத்திற்கு இலக்காக்கியதற்காக நொந்து கொள்கிறேன்"

"பெயல்கண் மறைத்தலின்
விசும்புகா ணலையே;
நீர்பரந்து ஒழுகலின்
நிலங்கா ணலையே;
எல்லை சேறலின்
இருள் பெரிது பட்டன்று;
பல்லோர் துஞ்சும்
பாநாட் கங்குல்
யாங்குவந் தனையோ?
ஓங்கல் வெற்ப!
வேங்கை கமழும்
சிறுகுடி
யாங்குஅறிந் தனையோ?
நோகோ யானே"

[குறுந்தொகை-355]

இப்பாடலில் இயற்கையின் துணை கொண்டு இரண்டு இதயங்களிலே எழுந்துள்ள தூய காதல் உணர்ச்சியைக் கவின் பெறச் சித்தரிக்கிருர் புலவர்.

ஜே. சி. ஷைர்ப் என்பார் கூறுவதுபோல் இயற்கை அரங்கம், மனித இதய அரங்கம் எனும் உலைக் கூடங்களிலே வார்த்தெடுத்த வார்ப்படம்தான் இது. இவ்வாறு இயற்கையும் இதயமும் இணைந்த பாடல்கள் சங்க இலக்கியங்களில் பெருவாரியாக உள்ளன.

★

எண்ணிப் பார்க்கும் தனிவும், சீர்தூக்கிப் பார்க்கும் திறனும், சரியெனக் கண்டதை எடுத்துரைக்கும் உள்ள உரமும் எளிதிலே பெற்றுவிடக் கூடியவையுமல்ல, எங்கும் மலிவாகக் காணக் கிடைப்பவையுமல்ல; கடலடி தூங்கும் முத்துப் போலவும் கனியுள் புதைபட்டுக் கிடக்கும் பொன்போலவும் நம் அனைவரிடமும் அந்த அருங்குணங்கள் உள்ளன. முத்தும் தங்கம் எடுத்துவர எவ்வளவு பாடும் முறையும் உண்டோ, அதற்கும் மேலாகத் தேவை. இத்தத் தொல்லை நமக்கேன் என்ற 'சோம்பற் குணம்' வேறுதாக்கும். அதனைத் தகர்த்திடும் ஆற்றலும் நிரம்ப வேண்டும். அந்தப் பணியிலே ஈடுபட நேரம் கிடைப்பதே இயலாது என்று கூறத்தக்க விதத்திலே பலருடைய வாழ்வு அமைந்துவிடுகிறது! என வேதான், வெட்டி எடுக்கப் படாமலுள்ள புதைபொருள் பலருடைய மனச் சுரங்கத்திலே உள்ளன; பொருளின்றி சமூகம் இடர்ப்படுகிறது.

பதிவு எண். எம்.4642 தொலைபேசி எண்.... அலுவலகம்.15 இல்லம்....118

# கடல் கடந்தோர் குரல்!

பிறநாடுகளில் விடுதலைப் போராட்டங்களின்போது தண்டவாளங்கள் பெயர்க்கப்பட்டது உண்டு. இரயில்கள் கவிழ்க்கப்பட்டது உண்டு. பஸ்கள் கொளுத்தப்பட்டது உண்டு. தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டது உண்டு. அடக்கியாளும் அக்கிரமக்காரர்கள் கொன்றுகுவிக்கப்பட்டதும் உண்டு. சாத்வீகம் போதித்த உத்தமன் காந்தியின் நாட்டில் கூட இவை கட்டுமீறி நடந்தன.

இந்நிகழ்ச்சிகள் இலங்கையில் இதுவரை நடந்ததில்லை. என்றுமே நடவாது. அதற்கெல்லாம் இடம் ஏற்படாது என்றுதான் நாம் இன்றும் எண்ணியிருக்கிறோம். ஆனால் இந்த நாட்டின் பிரதமர் தமது பாதகச் செயல்களாலும், பொறுப்பற்றபேச்சாலும் வெகுவிரைவில் நமது எண்ணத்தில் மண்ணைப் போட்டுவிடுவார் என்று தோன்றுகிறது.

தமிழன் பிறநாடுகளின் உதாரணத்தைப் பின்பற்றி விடுதலைப் போராட்டப் பாதையில் இன்னுமொருபடி முன்னேறிக் காரியமாற்றும் கட்டத்துக்கு சாட்சாத் பிரதமரே அவனை இட்டுச் செல்கிறார்.

"நாட்டு மக்களிடையே தோன்றியுள்ள இனத்துவேஷம் ஒழிய வேண்டும். சௌஜன்யசகவாழ்வு மலர வேண்டும்; ஒற்றுமை ஓங்கவேண்டும்; அமைதியும் சமாதானமும் நிலவ வேண்டும்" என்று பண்டாரநாயகா இராப்பகலாக வேண்டுகோள் விடுக்கிறார். வேடிக்கை! விநோதம்!! ஏன்? இனத் துவேஷத்துக்கு தூபம் இட்டவர் பண்டார நாயகா! சௌஜன்ய சகவாழ்வுக்குச் சவக்குழி தோண்டியவர் பண்டாரநாயகா! ஒற்றுமைக்கு முற்றுப்புள்ளி வைத்தவர் பண்டார நாயகா! அமைதிக்கும் சமாதானத்துக்கும் சமாதி கட்டியவர் பண்டார நாயகா! இன்னும் சொல்லப்போனால் தமிழனைப் போர்க்கோலம் பூண வைத்தவரே இந்தப் பண்டாரநாயகாதான்!

எப்படி? அதற்குக்கடந்த கால சரித்திரத்தில்சிறிதுகண்ணோட்டம்செலுத்த வேண்டும்.

எட்டாக் கனியாக இருந்த பிரதமர் பதவிக்கு பல்லாண்டு காலமாக கொட்டாவி விட்டுவந்தவர் பண்டார நாயகா! யார் எக்கேடு கெட்டாலும் தாம் அதை அடைந்து விடவேண்டும் என்ற அற்ப ஆசையில் 1956 பொதுத் தேர்தலில் 'சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்தார்! அதாவது சிங்கள மக்களிடையே சென்று அவர்கள் (சிங்கள) மொழியைமட்டுமே தாம் பதவிக்கு வந்தால் ஆட்சி மொழியாக்குவேன் என்று வாக்களித்தார். தமிழுக்கு அத்த அந்தஸ்து இல்லாது ஒழியச் செய்வேன் என்று உறுதி கூறினர். அப்படிச் செய்து தமக்கு ஆதரவு தேடிக் கொண்டார்.

திருடர் கூட்டத்துக்கு ஒரு திருடனைத் தவிர வேறு யாரும் நல்ல தலைவனாக இருக்க முடியாது. குடிவெறியர்களில் பெரியவனாக இன்னொரு குடிகாரனல்தானே வரமுடியும்! மொழி வெறியர்கள் விஷயமும் இப்படித்தான்.

> இலங்கையில் ஒலிக்கும் உரிமைக் குரல் பற்றி, "சுதந்திரன்" மூலம் கிடைக்கும் விளக்கம்.

பிரதமர் பதவிக்கு வந்த பண்டார நாயகா தன் இனத்தவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற முனைந்தார். ஆம், பதவி கிடைத்து இரண்டே இரண்டு மாதங்களில் அதாவது ஜூனில் 'சிங்களம் மட்டும்' சட்டத்தைக் கொண்டு வந்தார். அப்பொழுதே தமிழரின் உரிமைப் போராட்டத்துக்கு வித்திட்டு விட்டார் இந்தப் 'பெரியார்'

பாராளு மன்றக் கதவுகளை இறுக மூடிக்கொண்டு ஆயுதந் தாங்கிய போலீசாரைத் துணைக்கு அழைத்து வைத்துக்கொண்டு அந்தச் சட்டத்தை நிறைவேற்ற வேண்டிய கட்டம் அன்று ஏற்பட்டது. தமிழரசாரின் தலைமையில் தமிழர்கள் அன்று தொடுத்த போராட்டம் இதற்குக் காரணமாக அமைந்தது.

அன்று ஆரம்பமான போராட்டம் இடையில் (ஏற்பட்ட உடன்படிக்கை காரணமாக) சற்றுத்தளர்ந்து இருந்துவிட்டு இன்று மீண்டும் புது உத்வேகத்துடன் நடந்துகொண்டு இருக்கிறது.

"இனம் என்றால் சிங்கள இனம்; மொழி என்றால் சிங்கள மொழி" என்ற நிலையில் இருந்து பண்டார நாயகா அணுவளவும் விலகத் தயாராயில்லை. அந்த எல்லைக் கோட்டுக்குள் நின்றுகொண்டுதான் பஞ்சசீலம் பேசுகிறார்; ஐக்கியம் பேணுகிறார்; சமாதானம் கோருகிறார்; இன்னும் ஏதேதோ எல்லாம் பேசுகிறார்.

இனம் என்றால் சிங்கள இனமும் தமிழ் இனமும் என்று இருந்தால் பிரச்சனைக்கு இடமே இல்லை. மொழி என்றால் சிங்கள மொழியும் தமிழ் மொழியும் என்று இருந்தால் சிக்கலே கிடையாது. இது பண்டார நாயகாவுக்கு தெரியாத ஒன்றல்ல.

ஆயினும் அந்த நிலைமையை ஏற்படுத்த அவர் மறுக்கிறார். தம்மைப் பதவியில் அமர்த்தியவர்கள் சிங்களவர்களாம். சிங்களத்தை ஆட்சி மொழியாக்கவும் சிங்களவர்களை பாதுகாக்கவுமே தம்மை அவர்கள் தெரிவு செய்தார்களாம். அவர்கள் விருப்பத்துக்கு மாறாக தாம் எதையும் செய்ய முடியாது என்று கையை விரிக்கிறார். பாவம்! பதவி போய் விடுமே என்ற பயம்!! பதவி என்ன அவ்வளவு பெரிதா? சர்வாதிகாரம் சாசுவதமானதா? அப்படி நினைத்தால் அதன் விளைவை அவர் அனுபவித்தே தீரவேண்டும்.

சிங்களவர்களுக்கு சிங்களம் எப்படியோ அப்படித்தான் தமிழர்களுக்கும் தமிழ் உள்ளது. சிங்களவர்களுக்கு தமது மேம்பாட்டில் எவ்வளவு அக்கறை உண்டோ, அவ்வளவு அக்கறை தமிழர்களுக்கும் தமது மேம்பாட்டில் உண்டு. ஆகவே நாட்டில் ஒற்றுமை வேண்டும், அமைதி நிலவவேண்டும்என்பதற்காகத் தமிழர்கள் இந்த நாட்டில் சிங்களவர்களுக்கு அடிமைகளாக வாழத் தயாராயில்லை. அடிமைகளாய், உரிமை அற்றவர்களாய் தன்மானம் இழந்தவர்களாய் வாழ்வதைவிடச் சுதந்திரப் போராட்டத்தில் குதித்துச் சுத்த வீரர்களாய், மானம் உள்ள தமிழர்களாய் மடிவது மேல் என்று அவர்கள் கருதுகிறார்கள்.



... 'திராவிடநாடு' அச்சகத்தில் ...

